Registered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 34—No. 7



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | பிலவ ஆடி 1961 ஜூலை | இதழ் 7

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

# சமாஜ நிகழ்ச்சிகள்

**18-6-61.** இராயப்பேட்டை சுந்தரேசுவரர் கோவிலில் மாணிக்கவாசகர் திருநாள் கொண்டாடப் பெற்றது. திரு. ஜி. கலியாணம், எம்.ஏ. தலைமையில் திருவாளர்கள் டி. செங்கல்வராயப் பிள்ளை பி.ஏ., எல்.டி., வித்வான் அம்பை - சங்கரனார் இவர்கள் சொற்பொழி வாற்றினார்கள்.

**2-7-61.** சமாஜச் செயற்குழுக் கூட்டத்தில் மலேயாவில் சமாஜ ஆண்டு விழா, சமாஜக் கட்டிட டிரஸ்ட் பதிவு, சமாஜ அலுவலகம் முதலியனபற்றி ஆலோசிக்கப்பட்டது.

**21-7-61.** சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருநட்சத்திர விழா புரசை - கங்காதரேசுவரர் கோயிலில் திரு. நல். முருகேச முதலியார் பி.ஏ. அவர்கள் தலைமையில் கூடும். திரு. புலவர் முருகவேள், திரு. ஜி. கலியாணம் முதலியோர் சொற்பொழிவு செய்வார்கள்.

**30-7-61.** சமாஜச் செயற்குழுக் கூட்டம் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் காலை 9-30 மணிக்குக் கூடும். சமாஜ அங்கத்தினர்களும், செயற்குழுவினரும் இதையே அழைப்பாகக்கொண்டு கூட்டத்திற்கு வரும்படியாகக் கேட்டுக்கொள்ளப் படுகின்றனர்.— G. கலியாணம், சமாஜச் செயலாளன்.

உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கு நம்சமய உண்மைகளைத் தெரிவிக்கத் தக்கநூல் இல்லையே என்று கவலைப்படாதீர்கள். "அறப்பயிற்சி மாலை" நீதிபோதனை வகுப்புக்கு ஏற்றமுறையில் வெளிவந்துள்ளது. விலை 50 ந. பை. உடனே வேண்டும் படிகளுக்குச் சமாஜச்செயலருக்கு எழுதுங்கள்.

## செய்திச் சுருக்கங்கள்

இந்து தர்மப் பிரசார சங்கம் : 1955-ல் தோன்றியது. பதிவு செய்யப் பெற்றது. இதன் தலைவர் மதுரை யாதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீலஸ்ரீ ஆசார்ய சுவாமிகள் அவர்களின் அருளாசியையும் நிரம்பப் பெற்றது.

சங்கநோக்கம் : இச் சங்கத்தின் முக்கிய நோக்கங்களாவன : (1) ஹிந்து தர்மத்தின் அடிப்படைத் தத்துவங்களை ஹிந்து மாணவர்கட்கும், எளிய ஹிந்து மக்கட்கும் ஏற்ற முறையில் திருத்தமாக எடுத்துரைத்தல். (2) ஹிந்து சமுதாயத்திற்குள் ஒற்றுமையை வளர்த்தல். (3) பயிற்சி தந்து,தக்க பிரசாரகர்களை நியமித்து, பலஇடங்களில் வருஷமுழுவதும் சிறந்த பிரசாரம் நடத்துவித்தலும், தம் வாழ்க்கையை இத் தொண்டிற்கே உரிமையாக்க முன் வருபவர்

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வானியைஉள் நாடு

| மலர் 34 | பிலவ ஆடி 1961 ஜுலை | இதழ் 7 |
|---|---|---|

## நெடுநாளைய தேட்டம்*

(திரு. டாக்டர் - வ. ஆ. தேவசேனபதி, எம்.ஏ., பிஎச்.டி.)

மனிதன் தேடியலைந்த பொருளாகக் கடந்த காலத்தில் விளங்கியது யாது? நிகழ்காலத்தில் அங்ஙனம் திகழ்கின்றது எது? எதிர் காலத்தில் அஃது யாதாக இருக்கும்? இதற்குரிய விடையினை ஒரு சொல்லிலேயே தருதல் இயலும். அதுதான் 'இன்பம்' என்பது. இஃது ஏதோ ஒரு புதுமை போலத் தோன்றலாம். இன்பம் மட்டுமேயன்றிப் பொருள் புகழ் பதவி முதலியனவற்றையும் மனிதன் விரும்பித் தேடவில்லையா? ஆம், தேடி யலைகின்றான். எனினும், அவன் அங்ஙனம் தேடுவதன் அடிப்படை நோக்கத்தினை ஆராய்ந்து பார்த்தால், இன்ப வேட்கையே அதன் சாரமாக அமைந்திருத்தலைக் காணலாம். ஒருகால் இவ்வுண்மையை இன்னும் தெளிவாக இவ்வாறு கூறலாம்: ஒன்று, துன்பத்தினின்று தப்புதல்; இரண்டு, இன்பத்தினை அடைதல். துன்பத்தினின்று தப்புதல் என்பது உணவு கொள்ளுதலாற் பசி நீங்கப் பெறுதல் போல்வது. இன்பத்தை யடைதலாவது, பசி நீங்கப் பெறுதலால் விளையும் உடல்வளனை யுறுதலொப்பது. ஆனால், பசி நீங்குவதனால் மட்டுமே மனிதன் இன்பம் எய்துகின்றனனா? அவன் மீண்டும் பசிப்பிணியை அடைகின்றனன் அல்லனோ?

*திரு. 'டாக்டர்' அவர்கள் அண்மையில் சென்னை வானொலியில் நிகழ்த்திய "The Quest Eternal" என்னும் ஆங்கிலப் பேச்சினைத் தழுவியது. தமிழாக்கம்: முருகவேள்.

“பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும்” என மெய் கண்டார் கூறுதல் போல, பசித்தலும் உண்ணலும் ஆகிய இச்செயல்கள் மீண்டும் மீண்டும் ஒரு முடிவின்றி நடை பெற்றுக்கொண்டே யிருக்கின்றன அல்லவா ?

இங்ஙனமே, பொருள் புகழ் பதவி முதலியனவற்றையும் அவை நிலையான இன்பத்தைத் தரக்கூடும் என்ற நம்பிக்கை யில் மனிதன் தேடியலைந்து கொண்டிருக்கிறான். ஆனால், இவைகளையே வாழ்க்கையின் சிறந்த பேருகவும் குறிக்கோ ளாகவும் கொண்டு தேடி யலைபவர்கள், அணிமையிலோ சேய்மையிலோ என்றேனும் ஒருநாள், அவற்றாற் சிந்தை கலங்கித் திகைப்புறுகின்றார்கள். தேடும் அளவில் இவைகள் கிடைப்பதில்லை. அல்லது, ஒரோவழிக் கிடைத்தாலும் இவற்றின் பயன் ஏமாற்றம் விளைப்பதாகவே காணப்படு கின்றது. இவ்வாற்றால் இவர்கள் அடையும் இன்பமானது துன்பத்தின் இரு நிலைகளுக்கிடையே நிகழும் ஒரு சிறு ‘இடைப்பிறவரல் நாடகம்’ (Interlude) போலவே உள் ளது. மனிதனின் இந்நிலையானது,

“செருக்கும் சினமும்சேர் சிற்றுடலின் துன்பங்கள்
இருக்கின்ற நெடுநாளாய் ! என்றும்இவை ஒழிதலின்றே”

என்னும் கருத்தமையப் பாடிய ஆங்கிலக் கவிஞரைப் போலவே, அழுங்கியாற்றும் தகையதாய் இருக்கின்றது. இத்தகைய ‘திகைப்பு நற்செய்தி’ (‘Gospel of Despair’) யோடு நாமும் ஒத்துச் செல்ல வேண்டுவது தானா? இதனைத் தவிர வேறு யாதும் ‘நற்செய்தி’ யில்லையா ? ஆம். இருக் கின்றது ! உண்மையிலேயே, பலப்பல இருக்கின்றன. அவற்றுள் ஒன்றை ஈண்டு நாம் ஆராய்வோம். இந் ‘நற் செய்தி’யானது, ஆசிரியர் மெய்கண்டாரால் தரப்பெற்ற தாகும். ‘மெய்கண்டார்’ என்றால் ‘உண்மையைக் கண் டுணர்ந்தவர்’ என்பது பொருள். மெய்கண்டார் ஆன்மீகத் துறையில் ‘மூவாண்டிற் சிவஞானம் பெற்ற’ ஒரு ‘குழந் தைமைப் பேரறிஞர்’ (Child-prodigy) ஆவர்.

அற்றேல், இம் மெய்கண்டார் என்பார் யார்? அவர் கி. பி. 12-ம் நூற்றாண்டில் தோன்றி யருளியவர். அவர்தம் தந்தையார் அச்சுத களப்பாளர் என்பவர். வழிவழியாக வழங்கிவரும் கதையின்படி, அவர்தம் தந்தையார் மகப்

பேறு இல்லாதவராக இருந்தார். அதனால், அவர் தமது குல குருவாகத் திகழ்ந்துவந்த "சகலாகம பண்டிதர்" (எல்லா ஆகமங்களையும் கற்று வல்லவர்) என்பவர்பாற் சென்று, மகப்பேறில்லாத் தமது குறையைக் கூறி வருந்தினர். அவர் இறைவனை வணங்கி, அக்கால முறைப்படி, தேவாரத் திருமுறையினை எடுத்துக் கயிறு சார்த்திப் பார்த்தார். அது போது, "திருவெண்காடு என்னும் தலத்திற்குச் சென்று, அங்குள்ள முக்குளநீரில் மூழ்கிச் சிவபெருமானை வழிபடுபவர்களுக்கு, எல்லாத் தீங்குகளும் நீங்கும். மகப்பேறில்லாத குறையும் தீரும். இதில் ஏதும் சந்தேகம் கொள்ள வேண்டுவதேயில்லை" என்னும் கருத்து அமைந்த,

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினைவு
ஆயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே"

என்னும் திருப்பாடல் கிடைத்தது. அச்சுத களப்பாளர்க்கு இது பெரும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. அவர் தமது மனைவியாருடன் திருவெண்காட்டிற்குச் சென்று இறைவனை முறைப்படி வழிபட்டு வந்தார். சிறிது காலத்திற்குப் பின்னர், அவருக்கு ஒரு குழந்தை தோன்றியது. அதுவே பிற்காலத்து மக்களால் 'மெய்கண்டார்' எனப் போற்றப் பெறுவதாயிற்று. மெய்கண்டாரை அவர்தம் தாய்மாமன் வளர்த்து வந்தார்.

அக் குழந்தை, "சிறிய பெருந்தகையார்" எனப் போற்றலாம்படி, இளம் பருவத்திலேயே மிகப் பேரறிவு வாய்ந்ததாகப் பிறங்கியது. மிக இளம் பருவமாகிய மூன்றும் வயதிலேயே, பரஞ்சோதி முனிவர் என்பவர்பால் அருளுபதேசம் பெற்றுத் தியான சமாதி கைகூடி, மெய்யுணர்வு எய்தியது. உடனே அக் குழந்தை சைவ சித்தாந்த உண்மைகளை விளக்கத் தொடங்கியது. தம்மிடம் கல்வி கற்பதற்கு வரும் என்று கருதியிருந்த குல குருவுக்கு, இஃது ஒரு பெரும் வியப்பை விளைத்தது. அவர் குழந்தையாகிய மெய்கண்டார் இருக்குமிடம் சென்றார். அக் குழந்தை, உயிர்களின் துன்பங்களுக் கெல்லாம் மூலகாரணமான ஆணவமலத்தின் இயல்பினை விளக்கிக் கொண்டிருந்

தது. தாம் எய்தியிருந்த நூற் புலமையின் செருக்கால், குல குருவாகிய சகலாகம பண்டிதர், மெய்கண்டாரை நோக்கி 'ஆணவமலத்தின் சொரூபம் யாது?' என விளக்கும்படி வினவினர். எதும் பேசாமலே மெய்கண்டார் அவ்வினவுக்கு அளித்த விடை, அவரைத் திணுக்குறச் செய்தது. மெய்கண்டார் தமது கைவிரல் கொண்டு 'நீர்தாம் ஆணவ மலத்தின் சொரூபம்' என வினவுக்கு விடை கூறுவது போல அவரையே சுட்டிக் காட்டினர். சகலாகம பண்டிதர் அதுகாறும் வெறும் நூற்கல்வியையே, உயிர் விளக்கமாகிய மெய்யுணர்வு எனத் தவறுகக் கருதிச் செருக்குக் கொண்டிருந்தார். தமது பிழையினை யுணர்ந்த அவர், உடனே அச் சிவஞானக் குழந்தையின் திருவடிகளில் விழுந்து பணிந்தார். தமது பிழை பொறுத்துத் தம்மை மாணவராக ஏற்றுக்கொண் டருளும்படி வேண்டினர். மெய்கண்டாரும் அங்ஙனமே சகலாகம பண்டிதரை மாணவராக உவந்தேற்றுக் கொண்டு, அவருக்கு 'அருள் நந்தி' என்னும் திருப்பெயர் சூட்டி, தாம் இயற்றியருளிய சிவஞான போதத்திற்கு விரிவுரை நூல் ஒன்றை இயற்றும்படி பணித் தருளினர். சிவஞான போதத்திற்கு அருள் நந்தி இயற்றிய விரிவுரை நூலே 'சிவஞான சித்தியார்' என்பது.

மெய்கண்டாரின் சிவஞானபோதம் சுருக்கமானதொரு சிறிய நூல். அது பன்னிரண்டு சூத்திரங்களையும், இடையிடையே வார்த்திகம் என்னும் பொழிப்புரையையும், ஒரு சில உதாரண வெண்பாக்களையும் கொண்டது. அஃது அளவாற் சிறியதாக இருந்தாலும், சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கைகளை யெல்லாம் தெளிவுற வகுத்துணர்த்துகின்றது. உண்மையில், அதுதான் சைவ சித்தாந்த உண்மைகளை முறையாகவும் முதன் முதலாகவும் தமிழில் விளக்கும் நூலாகும். கச்சியப்ப முனிவர் என்னும் பெரும் புலவர் ஒருவர் பாராட்டிக் கூறியிருப்பதுபோல, மிகப் பெரிய மலையையும் தன்னுள்ளே அடக்கிக் காட்ட வல்ல மிகச் சிறிய கண்ணாடியைப் போலவே, சிவஞான போதமானது அளவிற் சிறியதாக இருப்பினும், சைவ சித்தாந்த அடிப்படையுண்மைகளை யெல்லாம் தன்னகத்தே பொதிந்து கொண்டு விளங்குகின்றது.

"சிறிய ஆடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிக்தாங்கு
அறிவு நூல்களின் முடிபெலாம் அகத்தடக் கியதோர்
நெறியின் நீடிய நிகழ்சிவ ஞானபோ தத்தைக்
குறிய நீர்தமி ழால்உரை குரவனைப் பணிவாம்."

மனிதன் தேடத்தகுந்த பொருளாக யாது இருத்தல்வேண்டும்? மனிதன் ஏன் ஆரா இயற்கை அவாவுடையனாய்த் துன்புறுகின்றான்? நிலையான பேரின்பத்தினை மனிதன் எவ்வாறு அடைதல் இயலும்? என்னும் வினாக்களுக்கு இந்நூலில் மெய்கண்டார் தரும் விடை என்ன? மனிதன் தேடத்தக்க பொருள் கடவுளேயாவர். கடவுளைப் பிரிந்திருத்தலே துன்பங்களுக்குக் காரணம். மீண்டும் கடவுளையடைந்து அவரோடு ஒன்றுபடுதலே நிலையான பேரின்பத்தைத் தரும்.

இவற்றைச் சிறிது விளக்கமாகக் காண்போம்! மெய்கண்டார் கூற்றின்படி, என்றும் உள்ள 'நித்தியப்'பொருள்கள் மூன்று உள்ளன. அவை பதி (கடவுள்), பசு (உயிர்கள்), பாசம் (தளைகள்) எனப்படும். உயிர்கள் தொன்றுதொட்டே அநாதியாகப் பாசங்களாற் பிணிக்கப்பட்டுள்ளன. உயிர்களைப் பிணித்துள்ள பாசங்களுக்குத் தொடக்கம் இல்லாதொழியினும், முடிவுண்டு. பாசங்களைக் களைதல் இயலும். உயிர் என்பது என்ன? உடம்பா, பொறிகளா, மனம் முதலியவைகளா? உயிர் என்பது இவைகளெல்லாம் அல்ல; இவைகளெல்லாம் ஒன்று திரண்ட கூட்டத்திற்கும் உயிர் என்பது பெயர் அன்று. அது 'பதி' எனப்படும் கடவுளும் ஆகாது. அஃது ஓர் அறிவுடைப் பொருள்; அறிவிக்க அறியும் தன்மையுடையது! உண்மையில், உயிர்கள் எண்ணில்லாதனவாக இருக்கின்றன. அவைகள் ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்களாற் பிணிக்கப்பட்டுள்ளன. எல்லாத் தீங்குகளுக்கும் மூல காரணமாய் நிற்பது ஆணவமலம். உயிர்கள் வியாபகத் தன்மையுடையன. அவற்றை ஆணவம் அணுத் தன்மைப் படுத்துகின்றது. மாயை என்பது நமது தனு கரண புவன போகங்களுக்குக் காரணமாய் அமைவது. கன்மம் என்பது செயல் எனப் பொருள்படும். நாம் செய்யும் செயல்களுக்கு முதல்வர்கள் நாமே என உரிமை கொண்டாடினால், அவைகள் நம்மை அடிமைப் படுத்துகின்றன.

"யான் செய்தேன் பிறர்செய்தார் என்னதுயான் என்னும்
இக்கோணை ஞானஎரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிட,அத் தத்துவன்தான் நேரே
தனையளித்து முன்நிற்கும்! வினையொளித்திட் டோடும்!
நான்செய்தேன் எனுமவர்க்குத் தான்அங் கின்றி,
நனுவித்தும் போகத்தைப் பண்ணுவித்தும் கன்மம்!
ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பின் அல்லால்
ஒருவருக்கும் யான்எனதிக் கொழியா தன்றே."

அங்ஙனமின்றி, இறைவன் திருக்கைகளில் நாம் ஒரு கருவியே என்னும் உண்மையை யுணர்ந்தால், கன்மங்கள் நம்மைக் கட்டுப்படுத்த மாட்டா.

"சலமிலனாய் ஞானத்தால் தனையடைந்தார் தம்மைத்
தானாக்கித் தலைவன்,அவர் தாம்செய்வினை தன்னால்
நலமுடனே பிறர்செய்வினை யூட்டிஒழிப் பானாய்
நணுகாமல் வினை அவரை நாடிக் காப்பன்!
உலகினில்என் செயலெல்லாம் உன்விதியே! நீயே
உள்நின்றும் செய்வித்தும் செய்கின்றாய்! என்றும்.
நிலவுவதோர் செயல்எனக்கின் றுன்செயலே! என்றும்
நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்கும் தானே"

எனவே, நம்முடைய செயல்களின் பயனாகிய வலையில் நாமே சிக்கிக் கொள்ளுகின்றோம். இவ்வாறு கன்மமலம் நம்மைக் கட்டுப்படுத்துகின்றது. ஆணவம் மாயை கன்மம் என்னும் மூன்றும் 'பாசம்' எனக் கூறப்படுமாயினும், மாயையும் கன்மமும் இறைவனின் திருவுள்ளப்படி நல்வழியிற் பயன்படுத்தப் பட்டால், அவைகள் நமது பாசப் பிணிப்பைக் கடக்க நமக்கு உதவி செய்யக்கூடும்.

எங்ஙனமெனின், முதலில் மாயையினை எடுத்துக் கொள்வோம்! உயிரின் அறிவானது மூலமலமாகிய ஆணவத்தால் மறைக்கப்படுகின்றது. இறைவன் உயிர்களுக்கு உடல் கருவி உலகம் நுகர்பொருள்கள் ஆகியவற்றைப் படைத்துக் கொடுத்து, உயிர்களின் அறிவை ஒரு சிறிது விளங்கச் செய்கின்றான். உடலானது ஐம்பொறிகளாலும்

அந்தக்கரணங்களாலும், உயிர் தனது மறைப்பை நீக்கிக் கொள்ள ஓரளவு உதவி புரிகின்றது. உயிரானது உடலைத் தக்க வழியிற் பயன்படுத்திக் கொண்டால்தான், உடலெடுத்தது இறைவழிபாட்டின்பொருட்டே என்பதனை யுணர்ந்து கொள்ளும். மனிதப் பிறவியே இறை வழிபாட்டிற்கு உறுதுணையாக இருத்தலின், மனித வாழ்க்கையானது மிகவும் அருமையும் சிறப்பும் வாய்ந்ததாகும். விண்ணுலகத்திலுள்ளவர்களும்கூட இறைவனை வழிபட இம்மண்ணுலகத்திற்கு வருகின்றார்கள்.

“ மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக்காக அன்றோ!
வானிடத் தவரும் மண்மேல் வந்தான் தனைஅர்ச் சிப்பர்!
ஊன்எடுத் துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ!”

உயிரானது மனிதப் பிறவியின் அருமையையும் சிறப்பையும் மறந்து, வெறும் புலன்களின் நுகர்ச்சிக்கே அதனைத் தவறுகப் பயன்படுத்துமாயின், மாயையானது உயிரின் மலப்பிணிப்பை நீக்கப் பயன்படாமல் உயிரை மயக்கி, அம் மலப்பிணிப்பிலேயே அழுந்தச்செய்யும்! “ வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் சேய்யும் அன்றே ” என்பது சிவஞான சித்தியார்.

இங்ஙனமே, கன்ம மலமும்கூட நல்வழியிற் பயன்படுத்தப்பெற்றால், உயிருக்குத் துணைசெய்யும். இறைவனின் திருக்கைகளில் தான் ஒரு கருவியே என்பதை உணர்ந்து கொண்டு, உயிரானது தன் கடமையைச் செய்தால், கன்ம மலம் உயிரைக் கட்டுப்படுத்தாது. அதற்கு மாறுகத் தன் செயல்களுக்குத் தன்னையே முதன்மையாகக்கருதி உரிமை கொண்டாடினல், கன்மமலம் உயிரை நிச்சயமாகப் பிணித்துவிடும். பயன் கருதாது, கடமையைக் கடமைக்காகவே செய்தலின் மூலம்தான், உயிரானது பாசத் தளையினை நீக்கிக்கொள்ளக் கன்ம மலத்தைப் பயன்படுத்த முடியும். இங்ஙனம் மாயையும் கன்மமும் உயிரின் பாசப் பிணிப்பினை அகற்றுதற்கு உதவிசெய்யும். அல்லது அதனை இறுகச் செய்வதற்கும் காரணமாக அமையும். மாயை கன்மங்களை உயிர் எங்ஙனம் பயன் கொள்ளுகின்றது என்பதனைப் பொறுத்தே இவைகளெல்லாம் அமை

கின்றன. ஒரு சங்கிலியின் வலிமையானது அதனுடைய வலிமையற்ற மிக மெல்லிய இணைப்பைப்பொறுத்தே அமைகின்றது என்பர். இங்கே ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்களில் மாயை கன்மம் என்னும் இரண்டினையும் நாம் வலிமைகுன்றச் செய்தல்கூடும். அங்ஙனம் செய்தலால், ஆணவ மலத்தின் ஆற்றல் தானே குறையும்.

எனினும், இவைகளெல்லாம் இறைவன் திருவருள் துணையால் மட்டுமே இயலும். ஆனால், இறைவன் ஒருவன் இருக்கின்றான் என்பதனை நாம் எவ்வாறு உணர்வது? மெய்கண்டார் இறைவனுண்மையில் நமக்கு நம்பிக்கையுண்டாக்குவதற்காகக் காரண காரிய ஆராய்ச்சி முறைகளைக் கையாளுகின்றார்! நாம் உலகத்திற் காண்கின்ற எந்தப் பொருளும் முதற்காரணம் துணைக்காரணம் நிமித்த காரணங்களை யுடையதாக விளங்குகின்றது. உதாரணமாக, ஒரு குடத்தினை எடுத்துக்கொண்டால், அதற்கு மண் முதற் காரணம்; தண்ட சக்கரங்கள் துணைக் காரணம்; குயவன் நிமித்த காரணம். குடம் தோன்றுதற்குக் குயவன் ஒருவன் இன்றியமையாமைபோல, அவயவப் பகுப்புடைய - நிலை மாறும் தன்மையுள்ள உலகப் படைப்பிற்கும் இறைவன் ஒருவன் இன்றியமையாதவன் ஆவான்.

“காரிய கார ணங்கள் முதல்துணை நிமித்தம் கண்டாம்!
பாரில்மண் திரிகை பண்ணு மவன்முதல் துணைநி மித்தம்!
தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக!
ஆரியன் குலாலன் ஆய்நின் றாக்குவன் அகிலம் எல்லாம்!”

இதுமட்டுமேயன்றி, வேறொரு காரணமும் கூட உள்ளது. மனிதர்கள் செயல்களில் ஈடுபடுகின்றார்கள். அவர்களைத் தம் அளவில் விட்டுவிட்டால், அவர்கள் தாம் செய்யாத நற்செயல்களுக்கு உரிமை கொண்டாடுவார்கள்; தாங்கள் செய்த தீச் செயல்களுக்குரிய தண்டனையினின்று தப்பித்துக் கொள்வார்கள். செயல்களின் பயன்கள் தம்மைச் செய்தவரைத் தாமே சென்றடையும் அறிவுடையன அல்ல. ஆதலின், செய்தார்மாட்டுச் செய்வினைகளின் பயனை முறையே சேர்ப்பிக்கவல்ல இறைவன் ஒருவன் இருத்தல் இன்றியமையாததாகின்றது.

"அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாம்சென்றங்கு
அவ்வினையைக் காந்த பசாசம்போல்—அவ்வினையைப்
பேர்மல் ஊட்டும் பிரானின் நுகராரேல்,
ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்து?"

அவ்விறைவன் படிப்படியாகத் தரும் ஒழுகலாற்றுப் பயிற்சியால், இன்பதுன்பப் பயன் எதனையும் கருதாது கடமைகளைப் புரியும் திறனை, உயிர்களுக்கு உண்டாக்குகின்றான்.

இத்தகைய காரணங்கள், இறைவன் ஒருவன் இருப்பதனை உடன்பட விரும்பாதவர்களை உடன்படச் செய்யக் கூடியன அல்ல. எனினும், போதிய நல்லூழால், நமக்கு ஆன்மீக அனுபவம் வாய்த்திருந்தால், அதனை வளர்க்க இக் காரணங்கள் உதவியாகக்கூடும். அல்லது, அத்தகைய ஆன்மீக அனுபவங்கள் நிகழக்கூடியவையே என்றும், அவைகள் அறிவு நெறிக்கு இயைந்தனவே என்றும் இக் காரணங்கள் உணர்த்தா நிற்கும்.

சுருக்கமாகக் கூறினால், மெய்கண்டாரின் உபதேசம் இதுவே! உயிரானது வேடர்களாற் கவர்ந்து செல்லப் பெற்ற ஓர் அரசிளங் குமரனைப் போன்றது. அஃது ஊனியல் வழிப்பட்டு வளர்கின்றது. புலன்களை யொட்டிய வாழ்க்கையை நடத்துகின்றது. அரசன் அரசிளங் குமரனை வேடர்களின் சூழலினின்றும் மீட்டு, அவனை அவ் வேடர்களின் இழிந்த வாழ்வியல் விளைவுகளை விடுத்தொழிக்கச் செய்து, அரசிளங் குமரனுக்குரிய சிறந்த பண்புகளை மேற்கொண்டு வாழுமாறு செய்தல் போல, இறைவனும் உலகியல் வாழ்வினின்று, அவற்றினை அருளியல் வாழ்வின்கண் தலைப்படுமாறு செய்தருள்கின்றான். அரசிளங் குமரனின் இன்பமானது, வேடர்களின் வாழ்க்கை முறைகளைத் தொடர்ந்து பின்பற்றுதலாலன்றி, அவற்றினை விட்டொழித்து, அரசநிலைக்குரிய வாழ்க்கைக்கு மாறி அதனை மேற் கொள்ளுதலாலேயே அமைகின்றது. அதுபோலவே, உயிர்களின் இன்பமும் தன்னலங் குறித்த புலன்வழி வாழ்க்கையை விடுத்தொழித்து, இறைவழிப் பட்ட அருளியல் வாழ்க்கையைக் கடைப்பிடித்தலால் தான் அமைகின்றது.

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே"

என்பது, மெய்கண்டாரின் சிவஞானபோதம்.

இறைவன் உயிர்வாழ் பொருள்கள் எல்லாவற்றின் நலங்களையுமே குறிக்கோளாகக் கொண்டுள்ளான். அது போலவே, இறைவழிப்பட்ட உயிரும் எல்லாப் பொருள்களின் நலத்தினையும் தனது பயன் கருதாத் திருத்தொண்டுக்கு உரியதாக்கிக் கொள்ளுதல் வேண்டும். அத்தகைய உயிரானது, தன்நலம் பற்றிக் கருதுவதேயில்லை. அது மன்னுயிர்களின் நலன் பொருட்டே வாழ்கின்றது. இதுவே இறைவனுக்குரிய திருத்தொண்டாகும். உயிரானது மன்னுயிர்களுக்காக வாழ்ந்து, தன்னை இறைவனின் திருக்கையில் ஒரு கருவியாக மட்டும் எப்போது கருத முற்படுகின்றதோ, அப்போது ஆணவம் மாயை கன்மம் ஆகிய மும்மலங்கள், உயிரைப் பிணிக்கும் வலிமையையிழந்து விடுகின்றன. இத்தகையதொரு நிலையை, இடைவிடாது இறையருளுணர்வில் ஒன்றிப் பயிலுதலின் மூலமே அடைதல் இயலும். வழிபாட்டிற் கழிக்கும் ஒவ்வொருநாளும் இன்பநாள் ஆகும். இறைவனை மறந்து கழித்த ஒவ்வொரு நாளும் துன்பநாள் ஆகும்.

"துன்பம் நும்மைத் தொழாத நாள்கள் என்பாரும்
இன்பம் நும்மை ஏத்தும் நாள்கள் என்பாரும்
நும்மின் எம்மை நுழையப் பணியே என்பாரும்
அன்பன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்"

இறைவனை வழிபடுதலும், அவனது புறவியல் மறுபகுதியாகிய உயிர்களுக்குத் தொண்டு செய்தலுமே, நிலைபேறான இன்பத்தினை அளிக்க வல்லவை.

"ஈசனுக்கன் பில்லார் அடியவர்க்கன் பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும்அன் பில்லார்."

மனிதனின் "நெடுநாளைய தேட்டம்" என விளங்கி வருவது இன்பத்தேட்டமே. இறைவனை வழிபடுதலாலும்,

இறைவன் படைத்த உயிர்களுக்குத் தொண்டு புரிதலாலுமே, மனிதன் இன்பம் அடைதல் இயலும்! மெய்கண்டாரின் ஞானச் செய்தியைச் சுருக்கமாகத் தொகுத்துக் கூற வேண்டுமாயின், அண்மைக்கால அருட்பெருஞ் சான்றோராகிய தாயுமானவர் திருமொழியாற் பின்வருமாறு கூறி முடிக்கலாம் :

"அன்பர்பணி செய்யஎன்னை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே"

——

# வசையில் இசை

(முருகவேள்)

சமயவுலகில் அண்மைக்காலம் வரையில் அறிஞர்கள் தம்முள் ஒருவரை ஒருவர் இகலி எழுதும் மறுப்புரை நூல்கள் (Polemical literature) பெரிதும் தோன்றி நிலவி வந்துள்ளன. இந்நாளில் அத்தகைய நூல்கள் போற்றப் படுவதில்லை. அதற்கு எத்துணையோ பல காரணங்களைக் கூறலாம். ஆயினும், மறுப்புரை நூல்கள் அறவே வெறுக்கத் தக்கன அல்ல. அவைகளிலும் போற்றத்தகுந்த பல சிறப்பியல்புகள் உண்டு. அவைகளில் ஒரு சில அறிவுக்குப் பெருவிருந்தாய், ஆராய்ச்சித் திறனை வளர்த்துச் செழிப்பிக்கும் நலமுடையனவாகத் திகழ்கின்றன.

'சைவ சித்தாந்த சண்டமாருதம்' ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர் (1846-1901) அவர்களைச் சைவவுலகம் நன்கறியும் "சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்" எனவரும் பெரிய புராணப் பாடலின் பொருள் குறித்து நாயகர் அவர்களுக்கும், யாழ்ப்பாணம் வடகோவைச் சபாபதி நாவலர் (1845-1903) அவர்களுக்கும் அக்காலத்தில் மிகப் பெரிய சொற்போர் நிகழ்ந்தது. நாவலர் அவர்கள் "ஞான சூடாமணி" என ஒரு நூல் எழுதினார்கள். அதனை மறுத்து நாயகர் அவர்கள், ஞானபேத விளக்கம், ஞானபேதத் தெளிவு, ஞானபேதத் துணிவு, ஞானபேத விளக்க நியாய ரக்ஷாமணி, ஞான சதுஷ்டய தர்ப்பணம் எனப் பல நூல்களை எழுதினார்கள்.

" சிவனடியே எனும் பனுவற் பொருள்சிதைய
இருஞானம் செப்பி, எங்கள்
தவமுதல்வர் சம்பந்தர் தமைச்சாழ சித்தர்
எனச் சாற்றி, நீடு
பவம்பெருக்கி, ஞாயமொரு சிறிது முணரார்!
நிந்தை படிப்பார் தீமை
உவந்து! எரிவாய் நிரயம்உமி ழாதுஅவரை
என்ஞான்றும் உண்மை தானே "

" எம்பெருமான் சம்பந்தன் இலகுசார
சாப்பகுதிக் கெல்லாம் தானே
செம்பொருளா தலும்உணரார்! சிவன்மகன்ஆ
தலும்உணரார்! சிவனும் ஞானம்
உம்பர்வழுத் துஒருநாவ்ந ஆதலும்உணரார்!
உரைத்திடினும் கேளார்! நாளும்
தம்பெருமை யேபேசித் தருக்குறுவார்!
அவர்பாவம் சாற்றொ ணாதே "

" இலக்கணம் அறியார்! இலக்கியந் தேர்ச்சி
எய்திலார் எட்டுணையேனும்!
எண்ணுவர் தாமே முற்றுணர்ந் தவராய்
ஏழைகா வலர்கள்தாம்! என்னே?
அலக்கணுற் றிடர்ப்பட் டழிவதல் லால்மற்
றுவதுண்டோ? இனி, அந்தோ !
அரகர சிவஎன் செய்குவோம்? பாவத்
தமூர்த்தியே எழும்புதல் இன்றிக்
கலக்கமுற் றழியும் கன்மமே வந்து
கலத்தலாற், சிவமணி யே!நின்
கால்மலர் வழுத்தும் பேறிழந் தனர்!அக்
கயவர்வாய் மதம்அடக் குதலே
விலக்கரும் விரத மாகவே கொண்டு
விளங்குகின் றேன்!எமை யுடையாய்!
வேதமும் விந்து நாதமும் கடந்து
மெய்யொளி பரப்பும் வேதியனே!"

என்றாற்போல, உரையும் பாட்டும் என்னும் இருதிறனாலும், நாயகர் அவர்கள் தமது மாற்றாரை மிக வன்மையாக அந்நூல்களால் மறுத்துரைப்பர் !

இங்ஙனம், நாவலர் - நாயகர் என்னும் இருவரும் தம்முள் நிகழ்த்திக்கொண்ட பெரும் சொற்போரின்கண் "ஆனை வெப்போரிற் குறுந்தூறு என" இடையிடையே சில அறிஞர்கள் கலந்துகொண்டனர். அவர்களுள் மகா வித்துவான் மதுரைச் சபாபதி முதலியார் அவர்களும் ஒருவராவர். அவர் 'பரிதிமாற் கலைஞர்' எனப் பெயரிய சூரிய நாராயண சாத்திரியார், B.A. அவர்களின் ஆசிரியராகத் திகழ்ந்தவர். அவரால் 'ஞான சதுஷ்டய தர்ப்பண வச்சிர சூசிகை' (1893) என்னும் சிறுநூல் ஒன்று வரையப் பட்டுள்ளது. அது நாயகர் அவர்களை மறுக்க எழுந்த நூலே யாயினும், வசையில் இசை அமைய, நாயகர் அவர்களின் அருமை பெருமைகளை நாம் அறிந்துகொள்ள அஃது ஓராற்றால் துணை புரிகின்றது.

ஸ்ரீலஸ்ரீ நாயகர் அவர்கள் சிவகதைகளை மனமுருகச் சொல்ல வல்லவர். ஞானசம்பந்தரைப் போன்ற பெருமித இயல்புடன், பிறர் கொள்கைகளைத் திறம்பட மறுக்கும் சிறப்பின் மிக்கவர். அயராது நெடுநேரம் நின்று சுவை மிகச் சொற்பொழிவாற்றும் இயல்பினர். வடமொழியிற் பெரும் புலமை வாய்ந்த அவர்தம் பேச்சிலும் நூல்களிலும் 'அஸாமஞ்சஸம்' 'பரிவசானம்' முதலிய வடசொற்கள் இடையிடையே விரவிவரும். அவர்தம் தோற்றம் கம்பீரமான சிவவேடப்பொலிவழகு மிக்குத்திகழும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் போல ஊன்றுகோல் ஒன்றும் அவர்தமது கையில் தாங்கியிருப்பர் போலும்! இலக்கியம் இலக்கணம் சாத்திரம் முதலிய பல துறைகளிற் பேராற்றல் பெற்றவர் அவர். வாதப்போரில் அவரை வெல்லல் அரிது. நாயகர் அவர்களின் இன்ன பல இயல்புகளை யெல்லாம், சபாபதி முதலியார் அவர்கள் தமது 'ஞான சதுஷ்டய தர்ப்பண வச்சிர சூசிகை' நூலிற் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்கள்:

"சிவ கதைகளை நன்கு பிரசங்கிக்கவும், பரசமய நிராகரணம் செய்தற்குரியவாய பிரமாணங்கள் பலவற்றைத் திரட்டிக் கூறவும் தக்க ஆற்றலை யடைதற்குரிய புண்ணியஞ் செய்த இவர்......தாம் வெளியிட்டுள்ள 'ஞான சதுஷ்டய தர்ப்பணம்' என்னும் நூலின்கண், அகங்காரத்தையே ஒரு வடிவமாகக் கொண்டு, பிறர் நிந்தையாகிய முடியைத் தரித்து,

நீண்ட பிரசங்கமாகிய முகம் பளபளக்க, அஸா மஞ்சஸம் பரிவசானம் பரியாலோசனை சாத்ருஸம் அசங்கதம் முதலிய வடமொழிச் சொற்களாகிய அரிதாரப் பூச்சிட்டு, இலக்கணக் கல்வியும் சாத்திரக் கல்வியுமாகிய கட்டுப் பல்லும் கட்டுத்தாடியும் விகார மாய்த் தோன்றி யசையுமாறு பூண்டு, சற் சூத்திரரின் வேடமாகிய சட்டையைப் புனைந்து, தருக்குரையும் செருக்குரையுமாகிய இரண்டு கைகளையும் நீட்டி வீசி, விபரீதவாதம் விதண்டாவாதம் என்னும் இரு கால் களை யூன்றி, அக் கால்களில் தாம் நெடுநேரம் நின்று பிரசங்கம் பண்ணும்படி சிட்டையாகப் பாடஞ் செய் திருக்கும் பாடல்களையும் அவற்றின் விபரீதார்த்தங் களையும் மடமட என்று கப்பிரமாகக் கூறும் ஆரவார மாகிய சலங்கைகள் கலகல என்று ஒலிக்கப் புனைந்து, சாதாரணமாகிய சனங்களை மயக்கும் படாடோபப் பொலிவாகிய ஓர் ஊன்றுகோலைக் கையிற் பிடித்துக் கொண்டு; அப் புத்தகமாகிய நடன சாலையில் விகடக் கூத்து ஆடுகின்றனர்."

இச் சொற்றொடரின் நீட்சியும் மாட்சியும் தாம் என்னென் பேம்! மறுப்புரையே யாயினும், இஃதொரு வகையில் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர் அவர்களைப் பற்றிய ஓர் அரும்பெருஞ் சொல்லோவியம் எனலாம் படியன்றோ, அழகியதாய் இனிது திகழ்கின்றது? ஸ்ரீலஸ்ரீ நாயகர் அவர்கள் எழுதிய "ஞான சதுஷ்டய தர்ப்பணம்" என்னும் நூல், உண்மைப் பொருளை விளக்குவதன்று என்பார் அதனை "நடனசாலை" என்றும்; அந் நூற்கண் உண்மை யல்லாதனவற்றை உண்மைபோல வைத்துக்காட்டி விளக்க முயலுகின்றார் என்பார் நாயகர் அவர்களைக் "கூத்தாடு கின்றார்" என்றும்; கூத்தாடுதலும் ஒரு சிறந்த கலையாத லின், அதுபற்றி நாயகரின் செயல் ஒரு வகையிற் பாராட் டப்படுவதற்கும் உரியதாம்போலும் என எவரும் மயங் கற்க, இஃது இழித்தற்குரிய கருங்கூத்தே என்பார் வாளா "கூத்தாடுகின்றார்" என்னாது "விகடக்கூத்து ஆடு கின்றார்" என்றும் அவர் குறிப்பிடுகின்றார்.

இம்மட்டோ! கூத்தாடுவார்க்குரிய செயல்களெல்லாம் இவர்பாற் காணப்படுமோ என வினவுவார்க்கு, அவை

யெல்லாம் இவர்பால் இயல்பாக அமைந்துகிடந்தன என்பார், முடிதரித்தல் அரிதாரம் பூசல், பொய்த்தாடி புனைதல் சட்டை தரித்தல் சலங்கையணிதல் கோல் ஊன்றல் முதலிய செயல்கள் பலவற்றையும், நாயகர் அவர்களின் திறத்தில் இனிது பொருந்த ஏற்றிக் கூறி, அவர் நகையாடியிருக்குந் திறம் சாலவும் போற்றற்குரியதாகும். நீண்டு விரிந்து நெறி பிறழாது பொருந்திய முறையில் திருந்தச் செல்லும் இச் சொற்றொடரின் உருவக அணி நலந்தான் எத்தகைய சுவை வாய்ந்து இன்பம் களிதுளும்பச் செய்கின்றது! கூறலுறும் பொருள்களையெல்லாம் சங்கிலிபோற் பிணைத்து வைத்து, ஓர் இயைபுபட இனிதமைத்து உருவகம் செய்திருத்தலின் இதனை இயைபுருவகம் என்பேமா? அல்லது, கூத்தாடுதல் என்னும் கருத்தை முதன்மையாகத் தேர்ந்தமைத்து, அதற்குரிய எல்லாவற்றையும் நிரந்தினிதெடுத்து நேர்பட வகுத்து முற்றுகத் தொடுத்து உருவகம் செய்திருத்தலின் இதனை முற்றுருவகம் என மொழிவேமா? அல்லது இவ்விரண்டின் இயல்புமே இனிதமைந்து ஒருங்கு காணப்படுதலின் இதனை இயைபுமுற்றுருவகம் எனக்கொண்டு மகிழ்வேமா?

இதனை என் சொல்லிப் புகழ்ந்து போற்றுகேம்! இன்னனைய சுவையமையச் செந்தமிழால் வசைகூறி வைதாலும், அதனைச் சான்றோர்கள் வாழ்த்தும் இசையும் எனவே கொண்டு மனங்களிப்பர் என்பதில் தடை என்னை? வசையிலும் இசை வளர்க்கும் இயல்புடைய இன்னோரனைய மறுப்புரை நூல்கள் அறிஞர்களாற் பெரிதும் உவந்து போற்றப்படுதற் குரியனவேயாகும். இஃதெங்ஙனமாயினும், மேலைச் சொற்றொடரானது ஆலிவர் கோல்ட்ஸ்மித் (Oliver Goldsmith) என்பார், சாமுவேல் ஜான்சன் (Samuel Johnson) எட்மண்ட் பர்க் (Edmund Burke) டேவிட் கேரிக் (David Garrick) முதலிய தமது நண்பர்களோடு ஒருபோது மாறுகொண்டு பழித்தெழுதிய "எதிர்த்தாக்கு" (Retaliation) என்னும் அரிய ஆங்கிலக் கவிதையின் நலங்களைப் பெற்றுள்ளமை, நம்மனோர் அறிந்தின்புறற்பாலது. முற்காலப் புலவர் பெருமக்களின் இயல்புகள் வாழ்க்கை வரலாறுகள் முதலியவற்றையும், அக்காலத்தின் இலக்கியப் போக்கு வளர்ச்சிமுறை நடைநலம் முதலிய

நீண்ட பிரசங்கமாகிய முகம் பளபளக்க, அஸா மஞ்சஸம் பரிவசானம் பரியாலோசனை சாத்ருஸம் அசங்கதம் முதலிய வடமொழிச் சொற்களாகிய அரிதாரப் பூச்சிட்டு, இலக்கணக் கல்வியும் சாத்திரக் கல்வியுமாகிய கட்டுப் பல்லும் கட்டுத்தாடியும் விகார மாய்த் தோன்றி யசையுமாறு பூண்டு, சற் சூத்திரரின் வேடமாகிய சட்டையைப் புனைந்து, தருக்குரையும் செருக்குரையுமாகிய இரண்டு கைகளையும் நீட்டி வீசி, விபரீதவாதம் விதண்டாவாதம் என்னும் இரு கால் களை ஊன்றி, அக் கால்களில் தாம் நெடுநேரம் நின்று பிரசங்கம் பண்ணும்படி சிட்டையாகப் பாடஞ் செய் திருக்கும் பாடல்களையும் அவற்றின் விபரீதார்த்தங் களையும் மடமட என்று கப்பீரமாகக் கூறும் ஆரவார மாகிய சலங்கைகள் கலகல என்று ஒலிக்கப் புனைந்து, சாதாரணமாகிய சனங்களை மயக்கும் படாடோபப் பொலிவாகிய ஓர் ஊன்றுகோலைக் கையிற் பிடித்துக் கொண்டு, அப் புத்தகமாகிய நடன சாலையில் விகடக் கூத்து ஆடுகின்றனர்."

இச் சொற்றொடரின் நீட்சியும் மாட்சியும் தாம் என்னென் பேம்! மறுப்புரையே யாயினும், இஃதொரு வகையில் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர் அவர்களைப் பற்றிய ஓர் அரும்பெருஞ் சொல்லோவியம் எனலாம் படியன்றோ, அழகியதாய் இனிது நிகழ்கின்றது? ஸ்ரீலஸ்ரீ நாயகர் அவர்கள் எழுதிய "ஞான சதுஷ்டய தர்ப்பணம்" என்னும் நூல், உண்மைப் பொருளை விளக்குவதன்று என்பார் அதனை "நடனசாலை" என்றும்; அந் நூற்கண் உண்மை யல்லாதனவற்றை உண்மைபோல வைத்துக்காட்டி விளக்க முயலுகின்றார் என்பார் நாயகர் அவர்களைக் "கூத்தாடு கின்றார்" என்றும்; கூத்தாடுதலும் ஒரு சிறந்த கலையாத லின், அதுபற்றி நாயகரின் செயல் ஒரு வகையிற் பாராட் டப்படுவதற்கும் உரியதாம்போலும் என எவரும் மயங் கற்க, இஃது இழித்தற்குரிய கருங்கூத்தே என்பார் வாளா "கூத்தாடுகின்றார்" என்னாது "விகடக்கூத்து ஆடு கின்றார்" என்றும் அவர் குறிப்பிடுகின்றார்.

இம்மட்டோ! கூத்தாடுவார்க்குரிய செயல்களெல்லாம் இவர்பாற் காணப்படுமோ என வினவுவார்க்கு, அவை

யெல்லாம் இவர்பால் இயல்பாக அமைந்துகிடந்தன என் பார், முடிதரித்தல் அரிதாரம் பூசல், பொய்த்தாடி புனைதல் சட்டை தரித்தல் சலங்கையணிதல் கோல் ஊன்றல் முத லிய செயல்கள் பலவற்றையும், நாயகர் அவர்களின் திறத்தில் இனிது பொருந்த ஏற்றிக் கூறி, அவர் நகையாடி யிருக்குந் திறம் சாலவும் போற்றற்குரியதாகும். நீண்டு விரிந்து நெறி பிறழாது பொருந்திய முறையில் திருந்தச் செல்லும் இச் சொற்றொடரின் உருவக அணி நலந்தான் எத்தகைய சுவை வாய்ந்து இன்பம் களிதுளும்பச் செய்கின் றது! கூறலுறும் பொருள்களையெல்லாம் சங்கிலிபோற் பிணைத்து வைத்த, ஓர் இயைபுபட இனிதமைத்து உருவகம் செய்திருத்தலின் இதனை இயைபுருவகம் என்பேமா? அல்லது, கூத்தாடுதல் என்னும் கருத்தை முதன்மையாகத் தேர்ந் தமைத்து, அதற்குரிய எல்லாவற்றையும் நிரந்தினிதெடுத்து நேர்பட வகுத்து முற்றுகத் தொடுத்து உருவகம் செய்திருத் தலின் இதனை முற்றுருவகம் என மொழிவேமா? அல்லது இவ்விரண்டின் இயல்புமே இனிதமைந்து ஒருங்கு காணப் படுதலின் இதனை இயைபுமுற்றுருவகம் எனக்கொண்டு மகிழ் வேமா?

இதனை என் சொல்லிப் புகழ்ந்து போற்றுகேம்! இன் னனைய சுவையமையச் செந்தமிழால் வசைகூறி வைதா லும், அதனைச் சான்றோர்கள் வாழ்த்தும் இசையும் எனவே கொண்டு மனங்களிப்பர் என்பதில் தடை என்னை? வசை யிலும் இசை வளர்க்கும் இயல்புடைய இன்னோரனைய மறுப்புரை நூல்கள் அறிஞர்களாற் பெரிதும் உவந்து போற்றப்படுதற் குரியனவேயாகும். இஃதெங்ஙனமாயி னும், மேலைச் சொற்றொடரானது ஆலிவர் கோல்ட் ஸ்மித் (Oliver Goldsmith) என்பார், சாமுவேல் ஜான்சன் (Samuel Johnson) எட்மண்ட் பர்க் (Edmund Burke) டேவிட் கேரிக் (David Garrick) முதலிய தமது நண்பர் களோடு ஒருபோது மாறுகொண்டு பழித்தெழுதிய "எதிர்த் தாக்கு" (Retaliation) என்னும் அரிய ஆங்கிலக் கவிதை யின் நலங்களைப் பெற்றுள்ளமை, நம்மனோர் அறிந்தின்புறற் பாலது. முற்காலப் புலவர் பெருமக்களின் இயல்புகள் வாழ்க்கை வரலாறுகள் முதலியவற்றையும், அக்காலத்தின் இலக்கியப் போக்கு வளர்ச்சிமுறை நடைநலம் முதலிய

பல செய்திகளையும், ஆராய்ந்து சுவைத்து இன்புறும் இயல்புடைய அறிஞர்களுக்கு, இதுபோன்ற அரிய மறுப்புரை நூல்கள் ஆராப் பெருவிருந்தாகும் !

சொல்லார் புகழ்ச்சோம சுந்தர நாயகரும்
நல்லார் சபாபதி நாவலரும்—வல்லாராய்த்
தம்முள் மறுத்தியற்றும் சைவத் தமிழ்நூல்கள்
மெய்ம்மை, உணர் விற்காம் விருந்து ! —முருகவேள்

---

# அளவை நூல்கள்

**திரு. மு. அருணசலம், எம்.ஏ.**

புலவர் ந. ரா. முருகவேள் எழுதிய 'தருக்கவியல் விளக்கம்' என்னும் 146 பக்கங்கள் கொண்ட நூலைச் சமீபத்தில் பார்க்க நேர்ந்தது. சிவஞானசித்தியாரின் அளவை இலக்கணம் கூறும் 14 திருவிருத்தங்களையும் அடிப்படையாக வைத்து, தமிழில் தருக்கக் கருத்துக்களை மிகவும் விளக்கமாக இச் சிறு நூலில் புலவர் விளக்கியிருக்கின்றார். இத் துறையில் கிடைக்கின்ற தமிழ் நூல்கள் மிக மிகக் குறைவு. முறையாகக் கற்றறிந்து அவற்றை விளக்கி உரைப்போரும் இன்னுங் குறைவு. இந்த நிலையில் புலவருடைய முயற்சியும் சாதனையும் பெரிதும் பாராட்டுதற் குரியன.

அன்றியும் புலவர், சித்தியார் கூறுகின்ற கருத்துக்களை விளக்குவதோடு அமையாது, நூல்களிலே விளக்கிக் கூறாத பகுதிகளையும் தம் நூலில் நன்கு விளக்கியுள்ளார்.

இத்தகைய சிறப்புடைய இச் சிறு நூல் சைவ சித்தாந்த சாத்திர அறிவு பெற விரும்புவார் யாவரும் போற்றிப் பயிலத்தக்கது.

தமிழில் அளவை இலக்கணம் கூறும் நூல்கள் யாவை என்று காட்டுதலே இக் குறிப்பின் நோக்கம்.

எந்த நூலுக்கும் இலக்கணங்களும் பிரமாணங்களும் (பிரமாணம் – அளவை) இன்றியமையாது வேண்டற் பாலன என்பது முந்தையோர் கருத்து :

"எப்பொருட்கும் இலக்கணங்கள் பிரமா ணங்கள்
இல்லையேல் இசையாதென்று இயம்ப லாலே
முப்பொருட்கும் இலக்கணங்கள் பிரமா ணங்கள்
மொழிந்திடு வாம்"

என்பது சிவநெறிப் பிரகாசம் 17-ஆம் பாடல். சீத்தலைச் சாத்தனர் இயற்றிய மணிமேகலைக்குப்பின் தமிழிலுள்ள முதல் அளவை நூல் சித்தியார் என்றே கருத வேண்டியுள்ளது. இது பாயிரத்தின் பின் 14 விருத்தங்களால் அளவை இலக்கணம் கூறுகிறது. இவற்றுள் கூறப்படும் பொருள்கள் முறையே காட்சி, அனுமானம், ஆகமம் என்பன.

சித்தியாருக்கு உரை எழுதிய அறுவருள், மறைஞான சம்பந்தர் சிவாக்கிர யோகிகள் நிரம்ப அழகிய தேசிகர் ஆகிய மூவரும் அளவை இலக்கணத்தை விரிவாக விளக்கியிருக்கிறார்கள். சிவாக்கிர யோகிகள் முழுமையும் வடமொழி மேற்கோளோடு தம் உரையை எழுதியுள்ளார். ஆனல், மறைஞான சம்பந்த தேசிகர், முழுமையும் தமிழ் நூல் மேற்கோளோடு தம் உரையை எழுதுகிறார். அவரது உரையால், பண்டைய அளவை நூல்கள் சில இருந்தன என்று தெரிய வருகின்றது. ஆனல் அந் நூல்கள் இப்போது கிடைப்பனவாகத் தெரியவில்லை. நூலறிவுக்கு அளவை சிறப்பாக வேண்டுவது என்று பின்வரும் பாடலை அவர் மேற்கோள் காட்டுகிறார்.

"பண்ணிலாற் கில்லாத பாட்டிற் பயன்போன்றும்
கண்ணிலாற் கில்லாக் கவின் போன்றும்—எண்ணிலா
அஞ்சொல் அளவை அறியா தவற்கில்லை
செஞ்சொல் அளவின் சிறப்பு"

என்று அளவை விளக்கத்தில் அறிக.

"மேற்கோள் ஏது உபநயம் நிகமனம் என முறை நிகழப்பெறுமே என்றார் தருக்க பரிபாடையில் கார்லிங்கராயர்" என்று தேசிகர் மற்றோர் இடத்தில் கூறுகிறார். இவ்விரு நூல்களும் கிடைக்கவில்லை.

சிவஞான போதத்துக்கு முதன் முதலாகப் பேருரை செய்த பாண்டிப் பெருமாள், பாயிரத்தின்பின், சித்தியார் அளவைப் பகுதி 14 பாடல்களையும் எழுதி விரிவுரை கூறிய

பின்னரே சிவஞான போதச் சூத்திரங்களைத் தொடங்குகி ருர். இதனுலும், சாத்திரம் பயில்வார் அளவை யறிவு பெற்ற பின்னரே, சாத்திரம் பயிலத் தொடங்கலாம் என்பதை முந்தை நூலாசிரியர்கள் எவ்வளவு முக்கியமாய்க் கருதினுர்கள் என்பதும், அதிலும் சித்தியார்த் திருவிருத்தங் களை எவ்வளவு சிறப்பாய்க் கருதினுர்கள் என்பதும் விளங்கும்.

சிவாக்கிர யோகிகள் தம் உரையில், அனேக அளவை நூற் கருத்துக்களைத் தாம் எழுதியுள்ள சித்தாந்த நிர்ணயம், சித்தாந்த தீபிகை என்ற நூல்களில் விளக்கியுள்ளதாக எழுது கிருர். இவை இரண்டும் இன்று கிடைக்கவில்லை.

சித்தியாரை அடுத்து அளவை இலக்கணம் கூறும் நூல் தத்துவப் பிரகாசம். இது சீகாழித் தத்துவப்பிரகாசர் செய்தது. இது 338 விருத்தங்கள் உடைய பெருநூல். இதன் பழைமையான உரையைத் தத்துவப் பிரகாசருடைய நேர் மாணுக்கர் செய்தார் என்று கருத இடமுண்டு. இத னுள் அளவை இலக்கணத்தைக் காட்சி தொடங்கித் தோல் வித்தானம் ஈருக ஒன்பது பாடல்களில் கூறுகிருர். அவ் வொன்பது பாடல்களையும் அந்தாதித் தொகையாக அமைத் திருக்கிருர். நூல்முழுமையும் இவ்வாறு இல்லை. இதனுல் அளவைப் பகுதியைப் பாராயணம் செய்யவேண்டும் என் பது முந்தையோர் கருத்து எனக் கொள்ள இடமுண்டு.

இதன் பின்னர்த் தோன்றிய நூல் சிவாக்கிர யோகி கள் செய்த சிவநெறிப் பிரகாசம். இது 12 பாடல்களில் அளவை இலக்கணம் கூறுகின்றது. சிவாக்கிர யோகி களின் மாணுக்கராகிய நந்தி சிவாக்கிர யோகியே இதற்கு உரை எழுதியுள்ளார்.

சிதம்பரம் கண்கட்டி மடம் மறைஞான சம்பந்த நாய ஞர் செய்தார் என்று வழங்குகின்ற பதிபசுபாசப் பனுவல் 337 குறள் வெண்பாக்களுடைய சிறு நூல். இதன் முதற் பகுதி பிரமாணவியல் எனப்படும். இது 68 செய்யுட்கள் கொண்டது. இந்தப் பகுதியில் ஆசிரியர் அளவை இலக் கணம் கூறுகின்ருர். இங்குக் காட்சி முதலாக ஐதிகம் வரை யிலுள்ள அளவைகளை இந்நூல் குறள் வெண்பாக்களால் எடுத்துக் கூறுகின்றது. இக்குறள் பாடல்கள் சில, சித்தி யார் அளவைப் பகுதி மறைஞான சம்பந்தர் உரையில்

எடுத்து ஆளப் பெற்றுள்ளன. அன்றியும் மறைஞான சம்பந்தர் சித்தியார் அளவைப் பகுதி உரையில் கட்டளைக் கலித்துறையிலமைந்த மேற்கோள் பாடல்கள் ஐந்து எடுத்துக் கூறுகிறார். இவை எந்த நூலில் உள்ளன என்று விளங்கவில்லை.

முப்பொருள் அளவை விளக்கம் : அடுத்து இங்கு நாம் கருதத்தக்கது, தருமபுர ஆதீனத்தார் வெளியிட்டுள்ள சம்பிரதாய தீபம்* என்ற நூலின் இடையில் வரும் முப்பொருள் அளவை என்ற பகுதி. இதன் பழமையான ஏட்டுப் பிரதி யொன்றை 'முப்பொருள் அளவை விளக்கம்' என்ற தலைப் புடன் நான் பார்த்திருக்கிறேன். இத் தீபம் செய்தார் சிவானந்த முனிவர் என்பார்கள். இவர் 250 ஆண்டுகளுக்கு முன் இருந்தவர்.

இவர் தம் குருவைச் சம்பந்தநாதன் என்றழைத்து, சித்தியார் கூறுகின்ற அளவையின் பொருளை முப்பொருள் மேல் வைத்து மொழியும்படியாகக் கேட்கிறார். வினவுக்கு விடையாக 38 பாடல்களில் ஆசிரியர் காண்டல், கருதல், உரை, பின்னுள்ள அபாவம் பொருள் உவமை ஒழிபு உண்மை இயல்பு ஐதீகம் என்ற பகுதிகளை முப்பொருள் சார்த்தி உதாரணங்கள் மூலம் விளக்குகின்றார். மூன்று காட்சிகளைக் கூறிய பிறகு பாடல்கள் இறந்துபோயின என்ற குறிப்புக் காணப்படுகிறது. பின்னர் ஒரு பகுதியில் அனுமானத்தில் பிரமாணத்திரயம் என்ற பகுதி 35 பாடல் களில் கூறப்படுள்ளது. பின்னர் 4 பாடல்களில் போலி கூறப்படுகிறது.

இடையில் பிரமாணத்திரயம் கூறுவதற்குமுன், இவ் வாசிரியர் தாம் அளவைக்குப் பிரமாணமாகக் கொண்ட

---

*அச்சிட்ட சம்பிரதாய தீபத்தில் சில பாடல்கள் இறந்தும் பல பாடல்கள் முறை பிறழ்ந்தும் உள்ளன. அன்றியும், இந்நூற் பாடல் பல, பெரியவரொருவர் ஞானக் குறிப்பாக எழுதி வைத்த பாடல்களின் தொகுப்பு என்று கருதவும் இடமுண்டு. உதாரண மாகக் குமர குருபர சுவாமிகள் பாடிய கந்தர் கலிவெண்பாவில் உள்ள "கருணை திருவுருவாய்க் காசினிக் கேதோன்றி, ஆணவ மான படலங் கிழித்து" என்ற வரிகளின் தொடர்கள் இத்தீபத்தின் தனி வெண்பாக்களாக இடம் பெற்றிருக்கக் காணலாம்.

நூல்கள் இவை என்று இரண்டு வெண்பாக்களில் கூறு கின்றார் :

“ வந்தஅறு மானஉப மான அளவைக்கிங்கு
எந்தநூல் முன்னூல் இயம்புவாய்—மைந்தா
சிவநெறிப்பிர காசம் சிவப்பிர காசம்
தவர்புகழ்ஞா னாமிருதந் தாம்.

தந்துவப்பிர காசம் சதுர்வேத சங்கிரகம்
முத்தர்பாற் கேள்வி முறைத்திரட்டு—சித்திமுதல்
பன்னூலின் உண்மை பகர்ந்தான் குரு அவைகள்
இந்நூலில் சொன்னோம் எடுத்து.”

இப்பாடல்கள் இரண்டினுள் சொல்லப்பட்ட நூல்கள் சிவநெறிப் பிரகாசம், சிவப் பிரகாசம், ஞானமிர்தம், தந்துவப் பிரகாசம், சதுர்வேத சங்கிரகம், திருமுறைத்திரட்டு, சித்தியார் என்பன. சிவப் பிரகாசத்துள்ளும், ஞானமிர்தத்துள்ளும் அளவை தனியாய்க் கூறப்பெறவில்லை. முத்தர்பால் கேட்டறிந்த திருமுறைத்திரட்டு தெளிவு படுத்துவதற்குப் பயன் பட்டதேயன்றி, அது அளவை கூறுவதன்று. சதுர்வேத சங்கிரகம் என்ற நூல் (சதுர்த்த சங்கிரகம்) சிவப்பிரகாச உரையில் மதுரைச் சிவப்பிரகாசரால் இரண்டு இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இது வடமொழி நூல். இவை நீங்க, ஏனைய மூன்று நூல்களும் தனியே அளவை யிலக்கணம் கூறுகின்றன. அவற்றைத்தவிர அளவை கூறும் பண்டைய சாத்திர நூல்கள் இல்லை என்பதும் உண்மை.

தருக்க பரிபாஷை : இது பிரமாணம் முதல் நிக்கிரகத் தானம் ஈறாகப் பதினாறு பதார்த்தங்களைக் கூறுகின்ற நூல். இது வட மொழியில் கேசவமிசிரர் என்பவர் இயற்றியது. தமிழில் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் உரை நடையில் மொழி பெயர்த்தது ; மூன்றும் பதிப்பு. யாழ்ப் பாணத்தில் நீதிபதி கதிர்வேல் பிள்ளை குமாரர் பாலசிங்கம் என்பவரால் 1904-இல் அச்சிடப்பட்டது. இதனுள்ளும் தோல்வித் தானங்கள் விளக்கிக் கூறப்பெறவில்லை. சிவப் பிரகாச சுவாமிகள் தமது வேதாந்த சூளாமணியுள்ளும் அளவை இலக்கணம் கூறியுள்ளார்.

தருக்க சங்கிரகம், தருக்க சங்கிரக தீபிகை : தெலுங்கராகிய அன்னம் பட்டர் என்ற மகா பண்டிதர் நியாயம்

வைசேடிகம் என்ற இரண்டு தருக்க நூல்களையும் வியாக்கியானங்களையும் நன்குணர்ந்து இப்பெயர் கொண்ட நூலும் வியாக்கியானமும் வட மொழியில் எழுதினர். வியாக்கியானமாகிய தீபிகை அன்னம் பட்டீயம் என்றுவழங்கும்.சங்கிரகத்தையும் தீபிகையையும் சிவஞானபோதமாபாடியக்காரராகிய சிவஞான சுவாமிகள் தமிழில் மொழி பெயர்த்தார். இது ஆறுமுக நாவலரால் பலமுறை அச்சிடப் பட்டுள்ளது. இதனுள் சிவஞான முனிவர் கூறும் தற்சிறப்புப் பாயிரங்கள் பின்வருவன :

" மன்ற வாணனை மனத்திடை நிறுவிவண் தறைசை
வென்றசீர் நமச்சி வாயமெய்க் குரவனை வணங்கி
யென்றனைப் பொருஉம் இளையவர்க் கினிதுணர் வுதிப்பத்
தென்றமிழ்ச்சொலாற் செயப்படுஞ் தருக்கசங்கிரகம் "

" மலைமகள் மணந்த உலகினுக் கிறையவன்
கலைமக ளாசான் கால்மலர் வணங்கிக்
கிளர் பொருள் தருக்கசங் கிரகம்
இளையோர் உளங்கொள இயம்புவன் உரையே.

இதனுள், மாணுக்கர் தருக்கம் அறிதற் பொருட்டு இந்நூலைச் செய்வதாக முனிவர் கூறுகின்ருர். தருக்க சங்கிரகமானது பதார்த்தம் எழு என்று தொடங்கி முடிவில் அபாவங் கூறிய பின்னர்ப் பதப் பொருள்கள் எழு என்று நூறு தலைப்புக்களோடு முடிகிறது. அச்சிட்ட பதிப்புக்களில் தருக்க சங்கிரகம் சூத்திரமாக இல்லை. உரைநடையாகவே சிவஞான முனிவர் முதலில் கருத்தைச் சொல்லிப் பின்னர் அதை விளக்கி, அதன் பின்னர் தீபிகையான விரிவுரை கூறுகிருர்.

இப் பதிப்பில், பதிப்பாசிரியர் தம் முகவுரையில் வரலாறு கூறுமிடத்து, தருக்க சங்கிரக வியாக்கியானங்கள் இன்னின்ன என்று விபரித்து எழுதுகிருர். இதனுள் கூறப்பெற்றுள்ள வியாக்கியானங்கள் தருக்க சங்கிரக வியாக்கியானம் எழு ; தீபிகை வியாக்கியானம் ஐந்து. இவை யாவும் வடமொழி.

1907-இல் திருமயிலை சே. சோமசுந்தரம் பிள்ளை அளவியல் என்னும் தருக்க விளக்கம் என்ற நூலை வெளியிட்டார். இது சிவஞான முனிவர் செய்த மொழி பெயர்ப்

பின் விளக்கமாகும். இந்த விளக்கம் எழுதியவர் மன்னார் குடி இராமசாமிப் பிள்ளை புதல்வர் சோமசுந்தரம் பிள்ளை என்பவர். இந்நூல் தீபிகைக்கு வியாக்கியானமாய் அமைந்துள்ளது. பாயிரமாக இவ்வாசிரியர் ஐம்பத்தொரு சூத்திரங்கள் எழுதியுள்ளார். மேலும் தருக்க சங்கிரகத்தைச் சிவஞான முனிவர் உரை நடையால் மொழி பெயர்த்திருக்க, இவ்விளக்க ஆசிரியர் ஒவ்வொரு தலைப்பையும் சூத்திர யாப்பினால் பாடிச் சேர்த்திருக்கிறார். இங்ஙனம் இவர் கூறியுள்ள சூத்திரங்கள் 100. இவற்றினும் அதிகமாகச் சிவஞான முனிவர் கூறியுள்ள விளக்கங்கள் அனைத்திற்கும் தனிச் சூத்திரங்கள் எழு சேர்த்திருக்கிறார்.

அன்றியும் விளக்கம் என்ற இதன் பெயருக்கு ஏற்பச் சோமசுந்தரம் பிள்ளை ஒவ்வொரு கருத்து முடிந்த விடத்தும் தம் விளக்கவுரையும் எழுதிச் சேர்த்திருக்கிறார்.

தத்துவராயர் தொகுத்த சிவப்பிரகாசப் பெருந்திரட்டில் பிரமாண சங்கற்பம் வாத சங்கற்பம் என்ற இரண்டு பகுதிகள் முழுமையும் அளவை இலக்கணத்தைக் கூறுவனவாய் உள்ளன. இவற்றுள் அளவையைக்கூறும் பாடல்கள் நடராஜ நிலையம் 11 பாடல், சிந்தாந்த தீபிகை 11 பாடல், குறுந்திரட்டு 2 பாடல்.

தமிழ் பெருந்தவரான மாங்காடு வடிவேலு முதலியார் ஓர் ஏட்டில் கிடைத்தன என்ற குறிப்போடு தருக்க சங்கிரக அகவல் என்ற தலைப்புடன் ஐம்பத்துமூன்று சூத்திரங்களைச் சிந்தாந்தம் இதழில் வெளியிட்டார். இந்தச் சூத்திரங்கள் சிவஞானமுனிவர் பாடிய தருக்க சங்கிரகத்துக்கு உரியனவாய்த் தெரிகின்றன. இவ்வகவல் குணம் 24-ல் 13-வது ஆகிய நிகழ்ச்சியோடு முடிகிறது. ஏனைய பகுதிகள் கிடைக்கவில்லை. இரண்டொரு வரிகள் மட்டும் தருக்க விளக்கச் சூத்திரவரிகளை ஒத்திருக்கின்றன.

அளவை அட்டவணை : எட்டுப் பக்கம் கொண்ட உரை நடை நூல். இதைத் திரு. அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் படியெடுத்து 1936 டிசம்பர் சித்தாந்தம் இதழில் வெளியிட்டிருக்கிறார். அட்டவணை என்பது இங்குக் கட்டளை என்னும் பொருளுடையது.

அளவை இலக்கணம் என்பது மற்றொரு சிறு அளவை நூல். உரை நடையால் ஆனது. காட்சி அனுமானம் ஆகமம்

போலி என்ற நான்கையும் விரித்துக் கூறுவது. இந்நூலில் வரும்,

இராகம் அறியார் இசைப்பயன் தாமறியார்
தாரதாரம் அறியார் காரியம் அறியார்
ஓரார் அளவை ஒருபயனும் தாமறியார்
ஆராய்ந் தளவை அறிந்துகொள்ளீரே

என்ற மேற்கோள் பாடல் இங்கு அறியத்தக்கது; சிவாக்கிரக யோகிகள் செய்த சிந்தியார் உரையிலிருந்து இந்நூலுடையார் இப்பாடலை எடுத்திருக்கிறார். இந் நூலுக்குத் தோற்றுவாய் செய்யும்முறை பின் வருமாறு:

"உலகத்துப் பதார்த்தங்களை யெல்லாம் அளக்குமிடத்து எண்ணல் எடுத்தல், முகத்தல், நீட்டல் என்னும் நால்வகை அளவினால் அளந்தறியுமாறு போல, பதி, பசு, பாசம் முதலிய பொருள்களைப் பக்குவான்மாக்களுக்கு அளந்து அறிவிக்கையின் பொருட்டு நியாய வகையான் விளக்குவதாய் உள்ளது அளவை எனப்படும்."

இம்முறை, பின்வரும் சம்பிரதாய தீபச் செய்யுளைத் தழுவியது என்பது வெளிப்படை:

"பார்மேல் அளக்கப் படுவ தளவையாம்
ஏர்கொள் முகத்தல் எடுத்தலுடன்—ஓர்பொருளை
எண்ணுதல் நீட்டல் இவைநான்காம் முப்பொருட்கு
நண்ணு மளவைசொல்வோம் நாம்."

இதுகாறும் கூறப்பெற்ற நூல்கள் இன்று தமிழில் அளவை என்ற பகுதியைக் கூறுவனவாகப் பெயரளவில் தெரிந்த கருவி நூல்கள்.

---

# போற்றி போற்றி

(திரு. மா. ப. தியாகராஜன், பி.ஏ.)

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!

"பொருள்தனைப் போற்றிவாழ்" என்பது சிறு வயதிலேயே கற்றுக்கொடுக்கும் பாடம். வாழ்க்கை முழுவதும் பின்பற்றக் கூடிய பொன் மொழியும் அதுவேயாகும் நம்முடைய உடைமைப் பொருள்களை நாம் போற்றிப் பரி

பாலிக்க வில்லையானல், அவைகளாலடையும் பயன் இல்லை யாகி விடுவதோடு அவையும் நம்மை விட்டுப் பிறர் கைச் செல்லக்கூடும்.

அதேபோல் நம்சுற்றமும் நண்பர்களும் நம் உடைமைப் பொருள்களேயாவர். அவர்களின் குற்றங்களையே கருதி நல்ல பண்பாடுகளைப் போற்றப் பழக வில்லையானல் "குற்றம் பார்க்கில் சுற்றமில்லை" என்றபடி அவர்களைப் பகைத்தவர்களாகி, அவர்களால் துன்பமடைய நேரிடும். நம்மை ஒருவர் புகழ்ந்து பேசினல் நமக்கு இன்பமுண் டாவது போல் பிறர்க்கும் நாம் இன்பமளிக்க வேண்டாமா?

"இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது"

வன் சொல்லும் வம்புச் சொற்களும் பேசிப் பழகி விடு வோமாயின் ஆண்டவனை வழிபடும் போதும் அப் பழக்கம் வழிபாட்டைத் தடைபடுத்தும். இறைவனை வழிபடும் போது நம் குறைகளும் சூழலின் குறைபாடுகளுமே நம்மனத்தி லெழுமேயன்றி, இறைவனின் புகழ்க் குணங் களையும் ஆற்றல்களையும் அவனல் நாமடைந்துள்ள நற்பேறு களையும் மறந்துவிட நேரிடும். போற்றக்கூடிய நண்பர் களோ, சுற்றத்தவர்களோ கிடைப்பதரிது. எனவே நமக்குப் போற்றும் பழக்கம் அமைய இடமில்லாமற் போய் விடுகிறது.

நாம் அப்பழக்கம் பெற வேண்டில் நித்தம் யாரைப் போற்றுவது? போற்றுதற்கே அமைந்தவன் இறைவன்? ஒவ்வோர் இமைப்போதும் நம்மைக் காத்து வருமிறைவன் நம்முள்ளே உயிர்க்குயிரா யிருப்பவன் என்பதனை நினைந்து நினைந்து உணர்ந்து கொள்ளாவிடில் உண்டியிருந்தும் பட்டினி கிடப்பவன் போலாகும். "பழக மாமலர் பறித் திண்டைகொண் டிறைஞ்சுவார் பாற்செறிந்த குழகனர்; குணம் புகழ்ந்தேத்துவா ரவர்பலர் கூடநின்ற கழகனர்" என்று திருஞானசம்பந்தர் இறைவனிலக்கணங் கூறுவ தால், போற்றிவாழும் தன்மையுடைய அடியவர்களே அப் பெருமையை யுணர்வார்கள். மற்றும் இறைவனைப் போற்ரு விடில் அவன்பால் நாம் பெறும் பேற்றை மறந்த நன்றி கொன்றவர் களாவோம். "நன்றி கொன்ற மகற்கு உய்வில்லை" யென்பது திருவள்ளுவர் முடிபு.

எனவே இறைவனைப் போற்றுதலும் அவன் அடியார் களைப் போற்றுதலும் வாழ்க்கைக் கின்றியமையாதன வாகும். போற்றுதலென்பது இறைவழிபாட்டில் ஓர் சிறந்த அங்கமாகும். அன்பை வளர்க்க வேண்டுமெனின் போற்றிப் பழகவேண்டும். அன்பேசிவம், மற்றவை அவம். சிவனால் ஆகாதது ஒன்றில்லை யென்றபடி அன்பினால் சாதிக்கப்படாத தொன்றிருக்க முடியாதென்றே கூறலாம். கற்றாரைக் கற்றாரே காமுறுவர் என்றபடி அன்பாம் சிவன் அன்பிலாரை எப்படி விரும்பக்கூடும். அன்புடையாரை அன்பாம் சிவன் காமுற்று ஈர்த்து ஆட்கொள்ளுகிறான். அவர்கள் போற்றும் பாடல்களைக் கேட்டனுபவித்துப் பரவசமடைகிறான். பாரொடு விண்ணுப் பரந்து விளங்கும் அப்பரமன், 'நன்றுடையான் தீயதிலானென்று' போற்றப் படுகிறான். அப்படியிருந்தும் தீமைகளைக் காண்கிறோமே என்று சிலர் எண்ணலாம். ஒளியிருக்க இருளைக் காண்ப தெப்படி? ஒளியை மறைத்தலால் இருள் காணப்படுகிறது. சிவபெருமானின் அருளாக்கத்தை மறத்தலினால் தீமையைக் காண்கிறோம். அவனுடைய திருவிளையாடல்களையும் அருள் விலாசங்களையும் கேட்டுச் சிந்தித்துப் போற்றாமல் மக்களின் பாசச் செயல்களையே பெரிதாகச் சிந்தித்து அவற்றை ஆய்ந்து அவைகளைப் பற்றியே பேசிக்கொண்டு அல்லற் படுவோமாயின் அது இறைவனின் குற்றமாகுமா? அல்லல் நீங்கவேண்டுமெனின் அவனருளை வியந்து போற்றுதல் வேண்டும்.

"ஒன்றியிருந்து நினைமின்கள் உத்தமக் கூனமில்லை" யென்று அப்பர் சுவாமிகள் சுருக்கமாகக் கூறிப்போந்தார். மேலும் நமக்காக அவர் ஐந்து போற்றித் திருத்தாண்ட கங்கள் பாடியுள்ளார். அவரேயன்றி மாணிக்கவாசக சுவாமிகள் "போற்றித் திருவகவல்" இயற்றியருளியுள்ளார். திருவாசகத்தில் திருச்சதகம் (காருண்யத் திரங்கல்) என்ற தலைப்பில் பத்துப் பாடல்கள் போற்றி போற்றி யென்றே பாடப்பட்டுள்ளன. வாரத்திற்கேழு நாட்களமைந்துள்ளது போல் மேற்படி எழு போற்றிப் பதிகங்கள் கிடைத் துள்ளன. தினம் ஒன்றாக அதை நாம் பயன் படுத்திக் கொள்ளலாம். சிவபெருமான் திருநட்சத்திரமாகிய திருவா திரையின் போது மாதமொருமுறை எழு பதிகங்களையும்

பாடி அருச்சனை செய்து வந்தித்தல் சைவ மக்களுக்கு மிகவுமின்றியமையாத ஒழுக்கமாகும். கோயில்களிலும் பன்னிரு திருமுறைகளில் காணப்படும் போற்றித் திருப் பாடல்களைக் கொண்டு அர்ச்சனை செய்து வருவார்களே யானல் பண்டைய சாந்நித்தியம் விளங்க அவருடைய திரு விளையாடல்கள் அங்கங்கே மீண்டும் துவக்கப்பெறும்.

அப்படியில்லாமையால்தான் ஆண்டவன் கோயில்களி லிருக்கின்ருனா இல்லையா என்ற அளவிற்கு மக்களிடை ஐயப் பாடு ஏற்படும்படி, இறைவனின் அருளாக்கங்கள் விளங்கா திருக்கின்றன. மேலும் சைவர்கள் என்று சைவ நீதி வழி நின்று வழிபடும் அன்பர்கள் ஒருவரையொருவர் காணும் போது, ஒருவர் "தென்னுடைய சிவனே போற்றி" யென்ற கூற, மற்றொருவர், "எந்நாட்டவர்க்கு மிறைவா போற்றி" யென்று கூறும் பழக்கமைத்துக் கொள்ளல் வேண்டும். இராமமதத்தினருக்கு அப்படிப்பட்ட வரன்முறைகளமைந் துள்ளன. அதேபோல் சைவர்களமைத்துக் கொள்ள வேண்டாமா? அவர்களும் "Good morning" என்று தான் கூறவேண்டுமா? அல்லது வெறும் "வணக்கம்" என்று கூறிக்கொண்டால் போதுமா? வாழ்த்திப் போற்றி வணங்க வேண்டாமா? தென்னுடைய சிவன் பேரால் வாழ்த்தி, எந்நாட்டவர்க்கும் இறைவன் பெயரைக் கூறி வணக்கம் செலுத்துதல் நன்மையன்ரே?

"போற்றி யருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி யருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றியெல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றியெல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றியெல்லா உயிர்க்கு மீறாம்இணை யடிகள்
போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்
போற்றி யாமுய்ய வாட்கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியாம் மார்கழி நீராடேலோ ரெம்பாவாய்."

நீராடும் போதும் உண்ணும் போதும் உறங்கும் போதும் மற்றக் காரியம் செய்யும் போதுமிறைவனை "போற்றியென்வாழ் முதலாகிய பொருளே" யென்று போற்றி செய்தல் வேண்டும்.

——

# கொடிக்கவி

(திரு. பாலூர் - கண்ணப்ப முதலியார், எம்.ஏ., பி.ஓ.எல்.)

(மலர் - 34; இதழ் - 6; 239-ம் பக்கத் தொடர்ச்சி)

சிவ சத்தி ஒற்றுமை நிலைக்குச் சூரியனை உவமை ஆக்கலாம். இதற்குக் காரணம் சூரியன் ஒளியாகவும் ஒளியுடைப் பொருளாகவும் இருப்பவன். ஒளியே ஈண்டுச் சிவம். ஒளியுடைய பொருள் சத்தியாகும். சூரியனது ஒளி இருளை நீக்கி, அதாவது கிரணமானது இருளை நீக்கிப் பொருள்களைக் காட்டுகிறது. அதுபோலவே சத்தியாம் கிரணமும் உயிர்களின் மல மாயங்களாம் அஞ்ஞான இருளை ஓட்டி மெய்ஞ்ஞானப் பொருளாம் ஒளிப்பொருளைக் காட்டும். சூரிய கிரணம்தான் நமக்குப் பகற்போதும் இராப்போதும் உணர்தற்குத் துணையாகிறது. ஆதலின் சத்தியும் போதுபோன்றவள் ஆவாள்.

உயிர்சார்ந்ததன் வண்ணமாவது. இருள்போல் அறியாததும் அன்று. ஒளிபோல் முற்றும் அறிவதும் அன்று. ஆனல் கண்போல ஏகதேசமாய் அறியும். கண் ஒளியுடைய பொறி. அங்ஙனம் ஒளியாயினும் பொருள்களை எப்போதும் காணுதல்வேண்டும். அங்ஙனம் காண்பது இல்லை. இருள் அடர்ந்திருக்கும்போது, கண் திறந்திருந்தும் பொருளைக்காண இயலவில்லை. கண்ணொளி அப்போது பயன்படுவதில்லை. ஆகவே அதற்குச் சூரியன் ஒளி தேவைப்படுகிறது. சூரியனுவான் ஆசாரியன். ஆசாரியன் துணையின்றிப் பொருளாம் பொருளைப் பார்க்கமுடியாது. இந்தச் சம்பந்தா சம்பந்தம் கண்ணுக்கும் சூரியனுக்கும் இருப்பதால் "கண்" ஆன்மாவாகவும் சூரியன் ஞானசாரியனுகவும் கருதப்படுகின்றனர்.

**கண் பசு வகை**

உயிரின் பொதுநிலைமை அஞ்ஞான நிலைமை. இது தூய தாயின் ஞானநிலை எய்தும். அஞ்ஞான நிலை இரண்டு. ஒன்று கேவலநிலை; மற்ருென்று சகலநிலை. உயிர் மூல மலத்தால் மறைப்புண்டு கிடப்பது கேவல நிலையாகும். இதனை மருட் கேவலநிலை என்றும் கூறப்படும். இதனையே "காரிட்ட ஆணவக் கருவறை" எனவும்படும். இதனை இரவு என்ற சொல்லாலும் கூறலாம் அன்ருே? இருளுடையது இருள்.

**கேவலம் இருள்**

உயிர் கேவலநிலையில் உள்ள நிலையில் அது சுத்தநிலை அடைய இறைவன் தனது இயற்கைக் கருணையால் தனுகரண போக போக்கியங்களைத் தருகிறான். இந்த நிலையே சகல நிலை எனப்படும். இதனைத் தெளிவுற "மெய் பொறி கள் எல்லாம் காவலன் கொடுத்தபோது சகலனும்" என்று சித்தியார் கூறுகிறதைக் காணலாம்.

சகலம் இரவு

இருள் ஆகாயம் போன்றது கேவலநிலை; அருணோதயம் போன்றது சகலநிலை. ஆகவே சகலநிலையும் அஞ்ஞான நிலையே ஆக இந்நிலை இருளாம் வெளி எனப்படும். கேவல நிலை இருளாய் இரவு எனப்படும்.

உயிர்கள் நற்கதிபெற வேண்டுமென்ற திருவுள்ளம் கொள்பவன் இறைவன். இதற்கென்றே அவ்வுயிர்கட்குச் சகல நிலையினைத் தருகிறான் என்றும் கண்டோம். இதற்காகவே சகல உலகங்களையும் படைத்துள்ளான். படைத்து அவற்றைக் காத்தும் வருகின்றான். மணிமொழியார் "முழுதும் படைப்போன் படைத்தவை காப்போன் காக்கும் கடவுள்" என்றனர். ஆளுடைய பிள்ளையார் "உரை சேரும் எண்பத்துநான்கு நூறாயிரமாம் யோனிபேதம், நிரைசேரப் படைத்தவற்றுள் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான் கோயில் வரைசேரும் முகில் முழவ மயில்கள் பல நடமாட வண்டுபாட வரைசேர் பொன் இதழிதர மென்காந்தள் கை ஏற்கும் மிழலையாமே" என்றனர்.

இறைவன் உயிராய் இருந்து அருள்வன்

"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும் காற்றும் ஆகி, அருநிலைய திங்களாகி ஞாயிறாகி ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகிப், பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும் பிறருருவும் தம் உருவும் தாமே ஆகி, நெருநலையாய் இன்றாகி நாளையாகி, நிமிர்புன் சடை அடிகள் நின்றவாறே" என்றார் ஆளுடைய அரசுகள். இவ்வாறு எங்கும் கலந்து விளங்கி ஆன்மாவிற்குக் காட்டுதலும் காணுதலும் புரிந்துகொண்டிருக்கிறான். ஆக இவ்விரண்டும் அவன் துணையின்றி நிகழா. இவற்றை அவன் அறிந்துகொண்டுள்ளான். காணுதலும் காட்டுதலும் இறைவன் செய்தலின் கருவிக்கூட்டங்களினின்று நீங்கிய ஆன்மாவிற்குத் தானும் தன் அறிவிற்குள்ளாய் நிற்கும் இறைவனும் விளங்கித் தோன்றும். இந்தக் குறிப்பே

கோபுர வாசல் தரிசனம் ஆகும். பின் வெளியே போந்து உலாவரும் காட்சியும் இதுவே ஆகும். இக்கருத்துக்கள் அனைத்தையும் கொண்டே,

ஐந்தெழுத்து

" பொருளாம் பொருளேது போதேது கண்ணேது
இருளாம் வெளியேது இரவேது—அருளாளா
நீபுரவா வையம்எலாம் நீஅறியக் கட்டினேன்
கோபுர வாசல் கொடி."

என்னும் பாடல் திகழ்கிறது.

இப்பாடலில் கருத்தா, சத்தி, ஆன்மா, கேவலநிலை, சகலநிலை என்ற ஐந்து பொருள்களைப் பற்றிப் பேசப்பட்டுள்ளன. பொருளாம் பொருள் கருத்தாவையும், போது சத்தியையும், கண் ஆன்மாவையும், இருளாம் வெளி சகல நிலையையும், இரவு கேவல நிலையினையும் உணர்த்தி நிற்கின்றன.

இந்த ஐந்து பொருள்களை உணர்த்திய வழியே ஐந்தெழுத்தையும் இதில் அமைத்துக் கூறியுள்ளனர். பொருளாம் பொருள் சிகர எழுத்தையும், போது வகர எழுத்தையும், கண் யகர எழுத்தையும், இருளாம் வெளி நகர எழுத்தையும், இரவு மகர எழுத்தையும் குறித்துக் குறிப்பிட்டிருப்பதையும் உணரும்போது இதில் சூக்கும பஞ்சாட்சரமாகிய சிவயநம மந்திரம் பொருந்தி இருப்பதைக் காணலாம். இந்த உண்மைகளை எல்லாம் இறைவன் உயிர்கள் மாட்டுக் கொண்டுள்ள அருள் காரணமாக உணர்த்துகின்றான் ஆதலின் அவனை அருளாளர் என்றனர். இந்த அருட் செயலை உணர்ந்து உணர்ந்து மணிமொழியார்,

அருளாளர் செய்தவை

கேட்டாரும் அறியாதான் கேடொன் றில்லான்
கிளையிலான் கேளாதன எல்லாம் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயினேற்கே
காட்டாதன எல்லாம் காட்டிப் பின்னும்
கேளாதன எல்லாம் கேட்பித்து என்னை
மீட்டேயும் பிறவாமல் காத்தாட் கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே "

என்று உள்ளம் உருகிப் பாடினர்.

சமயச் சார்பில் அடிக்கடி திரிகரணம் என்று கூறப் பட்டு வருவதை நாம் கேட்கிறோம். அத்திரிகரணம் என் பன மனம், வாக்கு, காயம் ஆகும். மனம் செலுத்தும் தொழிலையும், வாக்குச் சொல்லும் தொழிலையும், சரீரம் புல்லும் (தழுவும்) தொழிலையும் செய்ய வல்லவை. இம் மூன்றும் இம்மைக்கே நம்மை ஈர்த்துச் செல்பவை.

திரிகரணச் செயல்

மனம் உயிரை உலக ஈடுபாட்டில் இழுத்துச் செல்லும். இதன் தன்மையை நன்கு உணர்ந்தே தாயுமானவர், "காடும் கரையும் மனக்குரங்கு கால்விட்டு ஓட அதன் பிறகே ஓடும் தொழிலால் பயன் உளதோ" என்றனர். வாக்கு உலகப் பொருளைச் சொல்லும் இயல்புடையது. காயம் அழிபொருளைப் புல்லும் தன்மையது. இதனைச் சமயத் தொடர்புபடுத்திக் கூறுவோமானால் வாக்குச் சுத்த மாயா காரியப் பொருள், மனம் அசுத்த மாயா காரியப் பொருள், காயம் பிராகிருத மாயா மயமானது. இந்த வகை மாயா காரிய விளைவுகள் முறையே சவிகற்ப அறிவு, மயக்க உணர்வு, அஞ்ஞானச் செயல்களாம்.

இறைவன் மாயாதீதப் பொருள் : அவன் மாயைக்கு உள்படாதவன். இதனைப் பிரபுலிங்கலீலை தெளிவுற,

அவன் மாயாதீதன்

"வெண் திங்கள் நிலவுவாய் இடைப்புகினும்
சகோரம் எனும்புள் அன்றி
உண்டிங்கு வாழும் உயிர் உளதோ?
நம் அப்பனும் ஒருவன் தானும்
பண்தங்கு மொழிமாயை கைப்படினும்
அவன்பிடிக்கு அகப்படுவானோ தான்
தொண்டன்பின் வழிநின்று மனமாசு
தீர்த்தபெருந் தகையோர்க் கல்லால்"

என்று விளக்குகிறது.

"வானவர்கள் முதலோர்தம் மனத்தால் தேடிக் கருத் தழிந்து தனித்தனியே சென்று வேதங்களை வினவ, மற்றவையும் காணோம் என்று வருத்தமுற்றுங்கு அவரோ டும் புலம்புகின்ற வஞ்ச வெளியே இன்பமயமாம் தேவே" என்றனர் வள்ளலார். "வாக்கு மனமும் மவுனமுற எந்தை நின்னை, நோக்கு மவுனம் இந்த நூல் அறிவில்

உண்டாமோ" என்றனர் தாயுமானவர். 'உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்' என்றனர் சேக்கிழார். மனம், வாக்கு, காயங்களால் இறைவனைக் காண முயலல் பாச ஞானம். பசுஞானத்தால் பதியைப் பார்ப்பதற்கு இயலாது. இவற்றால் காண முடியாது என்பதைத் திட்ட வட்டமாக, "மறையினால் அயனால் மாலால் மனத்தினால் வாக்கால் மற்றும் குறைவிலா அளவினாலும் கூறொணாதாகி நின்ற இறைவனார்" என்று சிவஞான சித்தியாரும், "பாச ஞானத்தாலும் படர்பசு ஞானத்தாலும், ஈசனை உணர ஒண்ணாது இறை அருள்" என்று சிவப்பிரகாசமும் கூறுகின்றன. இங்ஙனம் எட்டாதவனாயினும் அறிவினிடத்து அறிவாய்ப் பிரிவிலனாய் உள்ளவன்.

இங்ஙனம் இறைவன் பசுஞானத்தால் பாசஞானத்தால் அறியா இயல்பினன் ஆயினும், பதிஞானத்தால் அறியக்கூடியவன் ஆவன். பதிஞானமே சிவஞானம். "சிவஞானமே திருவருள் ஞானம்." இதுவே குருவருளால் வரும் ஞானமாகும். ஆகவே காணப்படாத அச்சிவத்தை அச்சிவத்தின் அருள் உருத் தாங்கிய ஆசாரியரைக் கொண்டே அடைதல் வேண்டும். இது தவிர்த்து வேறு வழி இல்லை. இவ்வடிவமே பசு கரணத்தை நீக்கிச் சிவ கரணமாக்க வல்லது. கொடிக்கவி ஆசிரியரே தமது நெஞ்சுவிடு தூதில் "வல்வினையேனைப் பார்த்தான் பழைய வினைப் பஞ்சமலக் கோத்தை எல்லாம் நீத்தான்" என்றருளியுள்ளனர். தத்துவராயர்,

*பதியை அறியப் பதி அறிவு*

"உள்ளத் திருந்தும் ஒளித்தான் பரன்குரவன்
கள்ளம் தனைத்தவிர்த்துக் காட்டினான்—தள்ளல்
அருவான கோலமோ அக்கோலம் காட்டும்
குருவான கோலமோ கூறு"

*ஆசாரியன் பதிஞானம் அருள்வன்*

என்றனர். திருமூலர் குருவினையே துணைக்கொள்ள வேண்டும் என்பதை,

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே"

என்றருளிப் போயினர். " குருவழியே சென்று கூடலுமாமே " என்றும் கட்டளை இட்டனர். இக்குருவும் சற்குருவாக இருத்தல் வேண்டும். இன்றேல் தீமையே. இந்நிலையினை நமக்கு அறிவுறுத்தவே திருமூலர்,

சற்குரு

" கொள்ளினும் நல்ல குருவினைக் கொள்ளுக
உள்ள பொருளுடன் ஆவி யுடன்ஈக
எள்ளத் தனையும் இடைவிடா தேநின்று
தெள்ளி அறியச் சிவபதம் தானே "

என்றருளிச் சற்குருவைக் கொள்ளாது அசற்குருவைக் கொள்ளல் குருடர் குருடரை வழிக்குத் துணைக்கொள்வது போன்றது. இதனையும் தெளிவுறத் திருமூலர்,

அசற்குரு

" குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லும் குருடர்
மூறும் பழங்குழி வீழ்வர்கள் முன்பின்
குருடரும் வீழ்வர்கள் முன்பின் அறவே
குருடரும் வீழ்வர் குருடரோ டாகியே

என்றனர். இதனையே நகைச்சுவை தோன்ற,

குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்
குருடும் குருடும் குழிவிழும் ஆறே "

என்றும் அறிவித்து உள்ளார். ஆகவே சற்குருவே ஆன்மாவைச் சென்றவழி மாற்றி ஒருதெய்வவழியைக் காட்டுபவர் ஆவார். இந்தக் கருணையை வியந்தே திருவாதவூரார், " ஈர்ந்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே" என்றருளிப் போந்தார். இவை எல்லாம் குருவின் திருவருளால் உண்டாவன அல்லவோ?

இன்னோரன்ன அரும்பெரும் குறிப்புக்களை உட்கொண்ட பாடலே,

" வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும்
தாக்கா உணர்வரிய தன்மையினை — நோக்கிப்
பிறித்தறிவு தம்மில் பிரியாமை தானே
குறிக்கும் அருள்நல்கக் கொடி "

என்பது.

(தொடரும்)

களை ஆதரித்தலும். (4) கிளைச் சங்கங்களைப் பல ஊர்களில் ஏற்படுத்தலும், முன்னமே உள்ள ஹிந்துமத சங்கங்களை இணைத்துக் கொள்ளுதலும். (5) மிகவும் எழ்மையான நிலையிலுள்ளோர்க்கு அன்பு நெறி உணர்வுடன் இயன்ற அளவு ஜீவகாருணியத் தொண்டு புரிதலுமாம்.

வேண்டுகோள்: ஜனநாயக ஆட்சி நிகழும் இக்காலத்தில் தோன்றியுள்ள இச் சங்கம் மேற்கொண்டுள்ள பணி மிகப் பெரியது. சங்கத்திற்குக் காரியாலயமும் அவசியமான சிப்பந்திகளும் தேவை. பல பிரசாரகர்கட்கு ஊதியமோ சன்மானமோ அளிக்கவும், லக்ஷக்கணக்கில் துண்டுப் பிரசுரங்களும், சிறு வடிவ நூல்களும் அச்சிட்டு வழங்கவும் வேண்டும். மிகவும் எளிய மக்கட்கு இன்னும் பல வகைகளில் சேவை செய்து ஒற்றுமை விளையச் செய்யவேண்டும். ஹிந்து சமுதாயம் முழுவதுமே இதற்குத் துணைபுரிய முன்வந்தாலன்றி, நம் பாரதப் பண்பாட்டைக் காப்பாற்றுவதற்கு அத்தியாவசியமான இப்பணி இனிது நிறைவேறல் அரிது. ஆதலால், பல ஆயிரக்கணக்கில் அங்கத்தினர்களாகவும் நூற்றுக்கணக்கில் ஆயுள் அங்கத்தினர்களாகவும் ஹிந்துக்கள் உடனே இச் சங்கத்தில் சேர்ந்து அதைப் பலப்படுத்தலும், நமது மாநில ஹிந்துமத சங்கங்கள் பலவும் இச் சங்கத்தோடு தம்மை இணைத்துக் கொண்டு நம் சமுதாயத்தின் ஒற்றுமையையும் செல்வாக்கையும் வளர்த்துக் கொள்ளலும் மிக மிக அவசியம். சாதாரண அங்கத்தவர் ஆண்டுச் சந்தா ரூ. 3. ஆயுள் சந்தா ரூ. 100.

ஹிந்து மதத்தின் எல்லாப் பிரிவினர்களும் இவ்வாறு சங்கத்திற் சேரவேண்டும் என்றும், எல்லா ஆலய தர்ம கர்த்தர்களும், திருமடத் தலைவர்களும், பொருளையும் நல்ல தொண்டர்களையும் போதிய அளவு தந்து, இப் புனிதத் திருப்பணியை வெற்றியுடன் தொடர்ந்து நிறைவேற்றி வரத் துணைபுரிய வேண்டுமென்றும் அன்புரிமையுடன் சங்கம் பெரிதும் வேண்டிக் கொள்ளுகிறது. எல்லாம் வல்ல இறைவன், அவனையே நம்பித் தொண்டாற்ற முன் வந்துள்ள இச்சங்கத்திற்குக் கருணை பாலித்து, அளப்பரும் சிறப்பினையுடைய நமது ஹிந்து தர்மத்தைக் காத்து உலகுய்யச் செய்தருள்வானாக.

"செவ்வந்திப் புராண" விரிவுரை: திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபைக் கட்டிடத்தில் திரிசிராமலைப் புராணமாகிய "செவ்வந்திப் புராண" விரிவுரைத் தொடக்கவிழா 3-7-61-ல் நடை பெற்றது. திரு. T. S. சிவப்பிரகாசம் அவர்கள் எல்லோரையும் வரவேற்றார். திருவையாறு, தமிழ் ஆராய்ச்சியாளர், பண்டித வித்துவான் திரு. இராம.

கோவிந்தசாமி பிள்ளை அவர்கள் "செவ்வந்திப் புராண"ப் பாயிர விளக்கவுரை நிகழ்த்தினார்கள். இந்தப் புராண விளக்கவுரை சபையின் இரண்டு ஆண்டுத் திட்டமாக ஒவ்வொரு மாதமும் முதல் ஞாயிறன்று நடைபெறவுள்ளது.

**வாலாஜாபாத் வள்ளலார் மகளிர் இல்லம்:** வாலாஜாபாத்தில் அரசினர் மகளிர் உயர் நிலைப்பள்ளி இந்த ஆண்டு தொடங்கப் பெற்று நடந்து வருகிறது. அதில் கல்வி பயிலும் ஏழைப் பெண்கள் சிலருக்கு இல்லம் (ஹாஸ்டல்) ஒன்று தொடங்குகிறோம். இந்துமத பாடசாலையின் சார்பிலுள்ள வள்ளலார் மாணவர் இல்லத்தின் கிளையாக இம் மகளிர் இல்லம் நடைபெறும். இவ்வாண்டு இருபது மாணவியர்க்கு இடம் அமைக்க ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது. புதிய எட்டாம் வகுப்பில் படிக்கும் மாணவியர்க்கு முதல் இடம் தரப்படும். சேர விரும்பும் மாணவியர் உடனே விண்ணப்பம் செய்து கொள்ளலாம்.

**ஸ்ரீ மணிவாசகர் திருநாள்:** 19-6-61 திங்கட்கிழமை ஸ்ரீ மணிவாசகர் திருநாள் விழா ஆர்க்காடு கானூர் கேசவ முதலியார் வீதியிலுள்ள ஸ்ரீ மணிவாசக நிலையத்தில் தேவார திருவாசக இன்னிசையுடன் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.

---

**மறைவு:** நமது சமாஜத்துடன் நீண்ட காலமாகத் தொடர்புடையவரும், ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள்பாற் பேரன்பும் பெருந்தொடர்பும் கொண்டு விளங்கியவரும், ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் பிளவைக் கட்டி தோன்றி வருந்திய போது அறுவை மருத்துவம் செய்து அதனை விரைவிற் குணப்படுத்திய பெருந்தகையாரும் ஆகிய டாக்டர் - எஸ். பாலவேலாயுதம் பிள்ளை அவர்கள் (Civil Assistant Surgeon Retired) 19-6-61 திங்கட்கிழமையன்று, தாம்பரத்தில் தமது இல்லத்தில் மறைவுற்றமை குறித்துச் சமாஜம் பெரிதும் வருந்துகின்றது. சைவ நலங்களிற் சிறந்த அவர்தம் குடும்பத்தினருக்கும் உறவினருக்கும் சமாஜம் ஆறுதல் கூறுவதுடன், அப் பெருந்தகையாரின் ஆன்மா இறைவன் திருவடி நீழலில் இன்புற்று வைகத் திருவருளை வழுத்துகின்றது.

---

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.